# உங்களால் முடியும்!




## Shakti

**கார் மற்றும் வீட்டு உபயோகப் பொருட்களுக்கான கடன் வசதி திட்டம்**

உங்களது வாழ்க்கைக்குத் தேவையான இனிய வசதிகளுக்காக, பாரத் ஓவர்சீஸ் வங்கி வழி வகுக்கிறது.

### சக்தி கார் கடன் திட்டம்

- பணியாளர், சுய தொழில்புரிபவர், மற்றும் வர்த்தகர்களுக்காக மட்டுமேயான சிறப்பு திட்டம்.
- புதிய கார்களுக்காக எளிய நிதித்திட்டம். மேலும் சொந்தமாக உள்ள காரின் மீதும் கடன் வழங்கல். ஆனால் ஒரு வருடத்திற்குள்ளாக இருத்தல் வேண்டும்.
- 48 மாதங்கள் வரை திருப்பியளிக்கும் சுலப தவணைத் திட்டம்.

### சக்தி வீட்டு உபயோகப் பொருட்கள் மற்றும் இருசக்கரவாகனங்களுக்கான கடன் வசதி

- அங்கீகரிக்கப்பட்ட நிறுவனப் பணியாளர்களுக்கான குழுமக் கடன் திட்டம்.
- வீட்டு உபயோகப் பொருட்கள் மற்றும் இரு சக்கர வாகனங்களுக்கான கடன் திட்டம்
- 36 மாதங்கள் வரை செலுத்தும் சுலப தவணைத் திட்டம்.

**எளிய விதிமுறைகள், உடனடி அங்கீகாரம், குறைந்த வட்டி விகிதம்**

உங்களது அருகாமையில் உள்ள கிளையை உடனடியாக அணுகவும்.

விதிகளுக்குட்பட்டது.

FORTUNE-CH

## Bharat Overseas Bank Ltd.

**A bank owned by 7 banks.**

H.O: Habeeb Towers, 196, Anna Salai, Chennai 600 002. Tel: 852 2983, 852 0748. Fax: (91)-(044)-859 4615.
Telex: 041-7493 BOB-IN E-mail : bobl@md3.vsnl.net.in Visit us at : www.boblonline.com

*We'll be with you, right through*

ஜி. கிருஷ்ணமூர்த்தி
தலைவர்



மூத்த ஆதீனம்

# தொடரும் ஆதீன மர்மங்கள்...



கடந்த ஐந்தாண்டுகளுக்கு முன்னர், திருவாவடுதுறை சன்னிதானம் சிவப்பிரகாசம் தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் காசிக்குச் சென்றிருக்கிறார். 3.4.1997 அன்று மடத்தை விட்டு காசிக்குச் சென்ற மூத்த சன்னிதானம் 7.6.1999 அன்று திருவாவடுதுறை ஆதீன மடத்துக்குத் திரும்பி வருகிறார். அந்த இடைப்பட்ட இரண்டு வருட காலத்துக்கு இளைய சன்னிதானம் காசிவிச்வநாத தேசிக பரமாச்சார்யர் சுவாமிகள் மடத்தின் எல்லா நிர்வாகப் பொறுப்புகளையும் ஏற்று கவனித்து வருகிறார். மூத்தவர் காசியிலிருந்து திரும்பியதும் மீண்டும் அவரிடமே பொறுப்புகளை ஒப்படைத்துவிட்டு, அதன் பின்னர் தமது இளைய சன்னிதானப் பணிகளை மட்டுமே பார்க்கிறார். அதிலிருந்து கடந்த நான்கைந்து ஆண்டுகளாகவே இருவருக்குமிடைய நிறைய கருத்து வேறுபாடுகள், சின்னச் சின்ன மோதல்கள் துவங்கி விட்டன என்று மடத்துக்கு நெருக்கமானவர்கள் கூறுகிறார்கள்.

அந்த மோதலின் உச்சகட்டமே மூத்த சன்னிதானத்தைக் கொலை செய்ய முயன்ற சம்பவம் என விவரம் தெரிந்தவர்கள் சொல்கிறார்கள்.

என்னூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது திருவாவடுதுறை ஆதீனம். சைவ நெறி பரப்பி வரும் இம் மடத்தின் அசையாச் சொத்துகள் தமிழகமெங்கிலும் பரந்து விரிந்துள்ளன. ஏறத்தாழ அறுபத்தைந்தாயிரம் ஏக்கர் நிலம் இதற்கென இருக்கின்றது. இந்த ஆதீனத்தின் நேரடி பராமரிப்பில் இருபது திருக்கோயில்களும், பதினான்கு கட்டளைகளும் இருந்து வருகின்றன.

திருவாவடுதுறை ஆதீனத்தின் இருபத்து மூன்றாவது குரு மகா சன்னிதானமாக பட்டத்தில் இருப்பவர் சிவபிரகாசதேசிக பரமாச்சாரிய சுவாமிகள். அவருக்கு வயது ஐம்பத்து நான்கு.

அடுத்து இளைய சன்னிதானமாக பட்டத்தில் இருப்பவர் (?) காசி விஸ்வநாத தேசிக பரமாச்சாரிய சுவாமிகள். வயது முப்பத்து நான்கு. மூத்தவர் 1983லிருந்து குரு மகா சன்னிதானமாக இருந்து வருகிறார். இளையவர் 1989லிருந்து இளைய சன்னிதானமாக இருந்து வருகிறார்.

* குரு - சிஷ்யர்



ஆதீன மடத்துப் பணியாளர்களில் பெரும்பகுதியினர் மூத்த ஆதீனத்துக்கு ஆதரவாகவும், சிறு பகுதியினர் இளைய சன்னிதானத்துக்கு ஆதரவாகவும் செயல் பட்டு வந்துள்ளனர். காவல்துறை விசாரணை அடிப்படையில் இளைய சன்னிதானம்தான் கொலை முயற்சிக்குத் தூண்டுதலாய் இருந்துள்ளார் என்பது தெரிய வந்துள்ள நிலையிலும், இளைய சன்னிதானத்தின் ஆதரவாளர்களின் கூற்று வேறு திசையில் செல்கிறது. இளைய சன்னிதானத்தின் மீது கொலைப் பழி சுமத்தி அவரை மடத்தை விட்டே வெளியேற்ற வேண்டி மூத்த சன்னிதானத்தின் ஆதரவாளர்கள் செய்துள்ள வேலை இது எனக் கூறுகிறார்கள் அவர்கள்.



* இளைய மடாதிபதி

**உ**ண்மை நிலையறிய திருவாவடுதுறை ஆதீன மடத்துக்கு நேரில் சென்றிருந்தோம். தீவிர விசாரணைகளுக்குப் பிறகே மூத்த சன்னிதானத்தின் முக தரிசனம் நமக்குக் கிட்டியது. நம்மை அறிமுகப் படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தோம். "பேட்டி எதுவும் வேண்டாம்" என முற்றிலுமாக நம்மைத் தவிர்த்துப் பார்த்தார் மூத்த சன்னிதானம். விடை கிடைக்காது போனாலும், நாம் நினைத்திருந்த வினாக்களை அவரிடம் கேட்டு வைத்தோம். "இளைய சன்னிதானம் இப்பொழுது பட்டத்தில் இருக்கிறாரா? ஒரு வேளை அவர் நிரபராதி என நிரூபணமானால் மீண்டும் ஆதீனத்துக்குள் சேர்த்துக் கொள்வீர்களா? என்ன அடிப்படையில் இவரை இளைய சன்னிதானமாகத் தேர்ந்தெடுத்தீர்கள்?" போன்ற கேள்விகளுக்கு, கடைசி வரை மூத்த சன்னிதானம் பதில் சொல்ல மறுத்து விட்டார். இறுதியாக, "போலீஸ் கேஸாகி இருப்பதால் என்னால் இப்போது ஒன்றும் சொல்ல முடியாது. காவல்துறையினரிடம் எல்லா விபரங்களையும் கேளுங்கள். அவர்கள் உங்களுக்குத் தெளிவாக பதில் சொல்வார்கள்!" எனக் கூறி நம்மை காவல்துறை பக்கம் திருப்பி அனுப்பி விட்டார் மூத்த ஆதீனம்.

**ந**டந்தது இதுதானென காவல் துறையினர், ஒரு க்ரைம் கதையைப் போல சொல்ல ஆரம்பிக்கின்றனர் நம்மிடம்.

"கடந்த ஏழாம் தேதி ஞாயிறு இரவு. குரு பீடத்திலமர்ந்து மூத்த சன்னிதானம் பக்தர்களுக்கு ஆசி வழங்கிக் கொண்டிருக்கிறார். பக்தர் ஒருவருக்குப் பழங்கள் தர வேண்டி தமது பணிவிடையாளரான சரபோஜி என்பவரை மாடிக்கு அனுப்பியிருக்கிறார். வெகு நேரமாகியும் அவர் திரும்பி வரவேயில்லை. பதினான்கு வருடமாக மூத்த ஆதீனத்தின் மெய்க்காவலராக இருந்து வரும் வரதராஜன் என்பவரை மாடியில் தமது அறைக்குச் சென்று பழங்கள் எடுத்து வரும்படி பணிக்கிறார்.

"மாடியில் உள்ள மூத்த ஆதீனத்தின் அறைக்குள் நுழைந்த வரதராஜன், அங்கு நான்கு மர்ம நபர்கள் பதுங்கியிருப்பது கண்டு திடுக்கிட்டுப் போகிறார். அதில் ஒருவன் உடனே வரதராஜனின் வாயைப் பொத்தி தாக்க எத்தனிக்க, அதற்குள் வரதராஜன் பலங் கொண்ட மட்டும் அய்யோ... அம்மாவென கூக்குரல் கொடுக்க, மர்ம நபர்கள் நால்வரும் சட்டென தப்பியோடி விட்டனர். அந்த அறைக்குள் அவர்கள் விட்டுச் சென்றிருந்த கையுறைகள், விஷ ஊசி (சயனைடு திரவம் நிரப்பப்பட்டது என பரிசோதனையில் தெரிய வந்துள்ளது), தலையணை போன்றவை மூத்த சன்னிதானத்தைக் கொலை செய்ய வந்த நோக்கத்தை என காவல்துறையினர்க்கு வெளிச்சம் போட்டுக் காட்டின.

"தப்பியோடியவர்களைக் காவல்துறை தேடுதல் வேட்டையாடியது. இத்தனை அமளி துமளிக்கு இடையே இளைய சன்னிதானம் தமது அறையை விட்டு இரண்டு நாளாக வெளியே வரவில்லை. அவர் ஒன்பதாம் தேதி இரவு அளவுக்கு அதிகமான தூக்க மாத்திரை சாப்பிட்டது வெளியில் தெரிய வரவும், உடனே அவரைத் தனியார் மருத்துவமனை

யில் சிகிச்சைக்காக சேர்த்திருக்கிறார்கள்.

"தப்பியோடிய நான்கு நபர்களையும் கைது செய்தது காவல்துறை. தீவிர விசாரணையில் அவர்கள் நால்வரும், இளைய சன்னிதானத் தின் வேண்டுகோளுக்கிணங்க, சரபோஜியின் வழிகாட்டுதலுடன் மூத்த ஆதீனத்தை விஷ ஊசி போட்டுக் கொலை செய்ய முயற்சித் தாக வாக்குமூலம் தந்திருக்கிறார்கள். அவர் களது வாக்குமூலத்தின் அடிப்படையில்தான் இப்போது காவல்துறையினரால் இளைய சன்னிதானம் கைது செய்யப்பட் டிருக்கிறார்.



' பட்டம் சூட்டியபோது...

அவரிடமிருந்து செல்ஃபோனும், அவரது மூன்று வங் கிக் கணக்குகளின் பாஸ் புத்தகங்களும் எங்க ளால் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன. இளைய சன்னிதானத்தை சன்னிதானம் என்ற பெயரில் கைது செய்யாமல், மடத்துக்கு அழைத்து வந்து கவச குண்டலங்கள், உத்ராட்சம் போன் றவற்றை அகற்றிவிட்டே அவரைக் கைது செய் துள்ளது காவல்துறை. இதுதான் சார் நடந்தது!" எனக் கூறி பெருமூச்சு விடுகிறது காவல்துறை.

இது விஷயமாக செய்தியாளர்கள் எவரி டமும் மூத்த ஆதீனம் பேட்டி தருவதே இல்லை. காவல்துறையைக் கை காட்டி விடு கிறார். மூத்த ஆதீனத்துக்கு பி.ஆர்.ஓ போல காவல்துறை செயல்படுவது ஏனென்பதுதான் புரியவில்லை.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# தமிழுக்கே தலைகுனிவு!

அந்தக் காலத்தில் திருவாவடுதுறை மடத் திலிருந்த தம்பிரான்களின் முக்கியப் பணி என்ன தெரியுமா? பழைய செல்லரித்துப் போன பனை ஓலைச்சுவடிகளில் இருந்த தமிழ் இலக்கியங்களை, புதிய பனை ஓலைச் சுவடிகளில் படி எடுப்பதுதான். 1832ம் ஆண்டிலேயே, பனைப் பிரதிகளிலிருந்து, திருக்குறளைக் காகிதத்தில், அச்சேற்றியது, திருவாவடுதுறை மடம்தான்.

இந்த மடம் எண்ணூறு வருடங்களுக்கு முன்னர்தான் தோற்றுவிக்கப்பட்டது என் றாலும் பராந்தகச் சோழன் காலம் தொட்டே மடம் இருந்து வந்ததாக ஒரு தகவல் கூறுகிறது. இப்போது ஆதின கர்த் தராக இருப்பவர் 24வது பட்டம் சிவப் பிரகாச தேசிக பரமாச்சாரியார். சமஸ் கிருத அறிஞர் தண்டபாணி தேசிகரை, ஊக்குவித்து திருமந்திரத்துக்கு உரை எழுதச் சொன்னதும் மடம்தான். தமிழ் அறிஞர்கள் தெ.பொ.மீனாட்சி சுந்தரம் பிள்ளை, உ.வே. சாமிநாத அய்யர் ஆகியோரை மடத்திலேயே இருந்து தமிழ்ப் பணி ஆற்ற உற்சாகம் கொடுத்ததும் மடம் மற்றும் பன்னிரு திரு மறை போன்ற தமிழ் இலக்கியங்கள் அச்சுக் களிலும் மைக்ரோ பிலிம்களிலும் ஏற்றப் பட்டு காக்கப்படுகிறது என்றால் அதற்கு காரணம் மடம், பொக்கிஷமாக பாதுகாத்து வைத்த பனை ஓலைச் சுவடிகள்தான்.

''மடம் இப்போது தமிழ்ப் பணி, ஆன் மிகப் பணிகளையெல்லாம் குறைத்துக் கொண்டு விட்டது. இப்போது ஆண்டு வரவு-செலவு கணக்கும், லாப - நஷ்டமும்தான் பார்க்கப்படுகின்றன'' என்று கண்ணீர் மல்கச் சொல்கிறார் நெருக்கமாக இருந்த தம்பிரான் ஒருவர். மடத்தின் மாத வருமானம் ஒரு கோடி. மடத்தின் சொத்துக்களைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, இப்போதைய நிலையில் ஒரு குழுவை ஏற்படுத்தி, நிர்வாகத்தை ஒப் படைக்கலாமா என்று தமிழக அரசு யோசித்து வருகிறது. ஆனால் இது போன்ற மடத்து விவகாரங்களில் தலையிட்டால் பிற்காலத்தில் வரும் அரசுகள் இதையே முன்னுதாரணம் காட்டி தலையிடும் ஆபத்து இருப்பதாக இப் போது தமிழக அரசுக்கும் சங்க பரிவாருக்கும் வேண்டிய மடாதிபதி ஒருவர் தமிழக அரசை எச்சரித்திருக்கிறாராம்.

- ப்ரியன்

# கல்கி வைரவிழா மலர்

புன்னகைச்
சிறப்பிதழாக
மலர்கிறது





## முக்கூர்

அருளிய

# குறையொன்றுமில்லை

## ஐந்தாம் பாகம்

—இதுவரை வெளி வராத
பிரவசனங்களின் தொகுப்பு

# காத்திருக்கிறார் வள்ளுவர்!



புதுடெல்லி சேவா பவன் அருகில் காமராஜ் சாலையில் அமைந்துள்ள பெருந்தலைவரின் கம்பீரமான சிலை இதுநாள் வரை பறவைகள் எச்சமிட்டு, சுத்தம் செய்யப்படாமல் கவனிப்பின்றி இருந்தது. நரசிம்மராவ் பிரதமராக இருந்த போது அவர் கவனத்துக்கு இது கொண்டு வரப்பட்டது. அவர் உடனடியாக சிலை நிர்வாகக் குழு ஒன்றை அமைத்து அவ்வப் போது சிலைக்கு வர்ணம் பூசி அந்த இடத்தைச் சுத்தமாக வைத்திருக்க மாநகராட்சிக்குக் கட்டளையிட்டார்.

இந்தியக் குடியரசின் முன்னாள் தலைவர் ஆர். வெங்கட்ராமனின் அரிய முயற்சியால் நிறுவப்பட்டது இந்தச் சிலை. டெல்லி நகராட்சி பணியாளர்களின் பெருங்கருணையில் எப்போதாவது ஒரு முறை பெருந்தலைவர் சிலையும் சுத்தம் அடையும். டெல்லித் தமிழ்ச் சங்கத்தின் முன்னாள் செயலர் வெங்கடகிரி, ரங்கராஜன், மணியன், கிருஷ்ணமூர்த்தி போன்ற நிர்வாகிகளும் மற்ற உறுப்பினர்களும் பெருந்தலைவரின் ஒவ்வொரு பிறந்தநாளின் போதும் மழை பெய்தாலும் பெருங்காற்றடித்தாலும் சிலையைச் சுத்தம் செய்து மாலை அணிவிப்பது வழக்கம். மற்றபடி டெல்லியின் தமிழ்நாடு இல்லத்தின் மாலையைப் பெறும் பாக்கியம் பெருந்தலைவருக்கு எப்போதாவது ஒருமுறை கிட்டும். ஆனால் இந்த வருடம் அந்த மகாபாக்கியம் அவருக்கு அமர்க்களமாக கை கூடியது. அதிமுக உறுப்பினர்களும் இந்த மாலைசூட்டு வைபவத்தில் கலந்து கொண்டனர். தமிழ்நாடு அரசின் சார்பில் நாளேடுகளில் விளம்பரங்களை வெளியிட்டு அமர்க்களப்படுத்தினர்.

முதன்முறையாக சோனியா காந்தியின் கையால் மாலை பெற்றுக் கொள்ளும் புண்ணியத்தை பெருந்தலைவர் அடைந்திருக்கிறார். எளிமைக்கே பெயர் பெற்ற அந்தத் தலைவனின் சிலைக்கு மாலை அணிவிக்க சோனியா வருகிறார் என்று எக்கச்சக்கமான பாதுகாப்புக் கெடுபிடிகள், பந்தாக்கள். அவர் வந்து செல்லும்வரை வேறு யாரையும் அந்தப் பக்கம் அண்டவிடவில்லை. பாரதிய ஜனதாக் கட்சித் தலைவர்களும் வந்து மாலை அணிவித்துச் சென்றனர்.

டெல்லித் தமிழ்ச் சங்கத்தின் எதிரே அமைந்திருக்கும் திருவள்ளுவர் சிலைக்கு இது போன்ற அதிர்ஷ்டம் எப்போது அடிக்கும் என்று தெரியவில்லை. இப்போதைக்கு பேருந்து நிறுத்தத்தை ஒட்டியுள்ள அந்தச் சிலையின் அருகே பேருந்துகள் நின்றவுடனேயே உலகமே அடுத்த நிமிடத்தில் அழிந்து போவது போல அவசரமாக சிறுநீர் கழிக்க ஓடுகின்றனர் பயணிகள். தாடியும் தலைப்பாகையுமாக வள்ளுவரைப் பார்க்கும் பல வடக்கத்தியான்கள் இது யாரோ ஒரு சர்தார்ஜியின் சிலை என்று பேசிக்கொண்டு போகிறார்கள். பாவம், திருவள்ளுவருக்கு என்று மோட்சம் கிடைக்குமோ தெரியாது.

— ராகவன் தம்பி

# ஹனிமூனா? சனி மூனா?

**சுங்கவரி கட்டாமல் இறக்குமதி செய்யப்பட்ட ஃபாரின் சரக்குகளின் தொகுப்பு:**



**நா**யின் மோப்ப சக்தியை, வெடி குண்டுகளைக் கண்டு பிடிக்கவும், குற்றவாளிகளைப் பற்றி துப்பறியவும் தானே இங்கே பயன்படுத்துகிறோம். ஆனால், கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் ஒரு புதிய ஆராய்ச்சி நடக்கிறது. ஒருவருக்கு கேன்சரா என்பதை அவரது சிறுநீரில் கேன்சரால் பாதிக்கப்பட்ட செல்கள் இருக்கின்றனவா என்று நாயின் மோப்ப சக்தியால் கண்டுபிடித்து சிகிச்சையளிப்பதே இந்த ஆராய்ச்சியின் நோக்கமாம்.

'**ய**மஹா' என்றதும் உடனே நினைவுக்கு வருவது மோட்டார் பைக்தான். ஆனால், யமஹா நிறுவனம், மோட்டர் பைக்குகளைத் தயாரிப்பதற்கு முன்பிருந்தே பியானோ தயாரிப்பில் முன்னோடியாக இருந்தது. இன்று உலகில் மிக அதிகமாக பியானோ உற்பத்தி செய்யும் நிறுவனமும் அதுவே. அண்மையில் தொண்ணூறு வயதில் கெனிசி கவாகாமி என்ற பெயர் கொண்ட இந்தக் கம்பெனியின் தலைவர் மரணமடைந்தார்.

'**சை**னீஸ் அகாடமி ஆஃப் சயின்ஸ்' என்ற அமைப்பு, குளோனிங் முறையில் பாண்டா கரடியை உருவாக்கப்போகிறது. குளோனிங் பாண்டா, தயாராக இன்னும் ஓராண்டு ஆகுமாம்.

**உ**லகக் கோப்பை கால்பந்து திருவிழா ஒரு வழியாய் முடிந்திருக்க, ஜப்பானில், ரோபோ கால்பந்து போட்டி பரபரப்பாக நடந்திருக்கிறது. முப்பது நாடுகளிலிருந்து 193 ரோபோக்கள் இந்தப் போட்டியில் கலந்து கொண்டன. உலகின் டாப் செஸ் சாம்பியன்கள், கம்ப்யூட்டரிடம் தோற்பதுபோல, உலகின் டாப் கால்பந்து அணிகளை, 2050ல் ரோபோ அணி, ஜெயித்து விடும்; உலக கால்பந்து வரலாற்றில் அது மிகவும் சென்சேஷனலான தருணமாக இருக்கும் என்கிறார்கள் ரோபோ கால்பந்து போட்டி அமைப்பாளர்கள்!

**அ**மெரிக்காவில் டெக்ஸாஸ் மாநிலத்தில், ஒரு தம்பதி திருமணம் முடிந்து, இத்தாலிக்கு ஹனிமூன் புறப்பட்டார்கள். விமான நிலையத்துக்கு வந்து இறங்கிய போது, கைப்பையை காரிலேயே மறந்து வைத்துவிட்டது ஞாபகம் வர, அதை எடுத்துக் கொண்டுவரச் சென்றார் மணமகன் சீன் மெக் நல்டி. அதன்பின் மனிதர் என்ன ஆனார் என்று தகவல் இல்லை. விமான நிலையத்தில் காத்திருந்து, வெறுத்துப்போய் குழப்பத்துடன் வீடு திரும்பினார் மணப்பெண்.

நான்குநாட்கள் கழித்து, மண்டையில் அடிபட்டு, அம்னீஷியாவுக்கு ஆளாகி, ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கிறார் மெக் நல்டி என்று தகவல் கிடைத்தது. தமது திருமணம், புது மனைவி, ஹனிமூன் என எந்த ஞாபகமும் இல்லாமல், ஆஸ்பத்திரியில் இருக்கிறார் மாப்பிள்ளை.

— மானஸா



சென்னை ஸ்ரீமதி ராதா கிருஷ்ணமூர்த்தி & ஸ்ரீ V. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் குமாரன்

சிரஞ்சீவி : சங்கருக்கும் ‍ ‍ ‍ ‍ செள : தக்க்ஷணாவுக்கும்

*(Daughter of Smt. and Shri. G. Nagaraj, Mumbai)*

சமீபத்தில் (7.7.2002) சென்னையில் திருமணம் மிகச் சிறப்பாக நடந்தேறியது. காலையில் நடந்த திருமணத்திற்கும் மாலையில் நடந்த வரவேற்பிற்கும் ஏராளமான பிரமுகர்களும், உறவினர்களும், நண்பர்களும், பெரியோர்களும் வந்திருந்து வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்!

**போ**குமிடமெல்லாம், பெரிய கூட்டத்தைத் திரட்டி, பாட்டு, பேச்சு என கலகலப்பாக்கி விடும் வித்தை குடியரசுத் தலைவருக்குத் தெரிந்திருக்கிறது. சமீபத்தில் பெங்களூர் வந்திருந்த அப்துல் கலாம், மாணவ மாணவிகளுடன் சேர்ந்து 'ஸாங் ஆஃப் யூத்' என்ற பாடலைக் கோரஸாகப் பாடி மகிழ்ந்தார்.

''வளர்ச்சி பெற்ற இந்தியா என்ற கனவு நிறைவேறும்வரை நான் என் ஞான தீபத்தை ஏற்றிக் கொண்டேயிருப்பேன்'' என மாணவ மாணவிகள் சத்திய பிரமாணம் எடுத்துக் கொள்ள ''உலகிலேயே மிகவும் வலிமையானது கொழுந்து விட்டெறியும் மனமும் புத்தியும்தான். என்னால் உங்கள் மூளையைப் பற்ற வைக்க முடியுமானால், இந்நாடு கண்டிப்பாகத் தழைக்கும்'' என்று கலாம் சத்தியம் செய்ய, கூட்டத்தினர் நெகிழ்ந்து போனார்கள்.

# கடலை இன்னும் காவிரித் தாய்!

★ **க**ன்னட திரைப்பட நட்சத்திரங்கள் பொங்கி எழுந்து, பிஸியான மெஜஸ்டிக் பகுதியில் தடபுடல் ஆர்ப்பாட்டம் செய்து விட்ட சம்பவம் தான் பெங்களூரின் லேட்டஸ்ட் நியூஸ்.. சிவராஜ்குமார், விஷ்ணுவர்த்தன், உபேந்திரா, ரவிசந்திரன், பிரேமா, ரக்ஷிதா மற்றும் எண்ணற்ற தொழில்நுட்பக் கலைஞர்கள் என கன்னட திரைப்படக் குடும்பமே, வரிந்து கட்டிக் கொண்டு களத்தில் குதிக்க, செய்தித் தொடர்பு அமைச்சர் திம்மப்பா, அமைதிப் படுத்த உடனே ஸ்பாட்டுக்கு விரைந்தார்.

ஏகப்பட்ட கோரிக்கைகள், நிபந்தனைகள், கேள்விக்கணைகள் வந்து பாய, திம்மப்பா, திண்டாடிப் போனார். 'திரையரங்குகளின் வாடகை உயர்வு, புதிய தமிழ்சினிமா சென்னையில் ஏழு வாரம் ஓடிய பிறகே (!) பெங்களூரில் திரையிடப் பட வேண்டும், குழந்தைகளுக்கான பட விழாவில் மொழி மாற்றம் செய்யப்பட்ட படங்களின் எண்ணிக்கை அதிகமானது ஏன்?' இப்படி ஏகப்பட்ட பிரச்னைகள் எழுப்பப்பட்டன.

''அனைத்தும் சுமுக



• நட்சத்திர 'பந்த்'

மாகத் தீர்க்கப்படும்...'' என்று அமைச்சர் கையில் அடித்து சத்தியம் செய்த பிறகே, நட்சத்திரங்கள் கலைந்து சென்றனர்.

பத்தொன்பது தியேட்டர்கள் கொண்ட மெஜஸ்டிக் பகுதியில், குழுமியிருந்த ரசிகர்கள் அனைவரும் ஓசியிலேயே தத்தம் இஷ்ட தெய்வங்களைத் தரிசனம் செய்த திருப்தியில் ஆனந்தித்தனர்.

'ராஜ்குமார் வருவார்' என கடைசி வரை எதிர்பார்க்கப்பட்டது. அவர் வராது போனாலும், அவர் சார்பாக பார்வதம்மா ராஜ்குமார் வந்து உற்சாகப்படுத்தியதில், தொண்டர்கள் களிக் கூத்தாடியது கண்

கொள்ளாத காட்சி!

★ ஜவகல் ஸ்ரீநாத் மைசூர் சென்றபோது, ஏதோ முக்கியமான தஸ்தாவேஜு ஒன்று காணாமல் போக, மனுஷன் நேராக கூவெம்பு பகுதி காவல் நிலையத்துக்குப் புகார் கொடுக்கச் சென்றிருக்கிறார். இன்ஸ்பெக்டர் ராஜேந்திர பிரசாதிற்கு ஸ்ரீநாத்தை அடையாளம் தெரியவில்லை. தான் யாரென்று அடையாளம் காட்டிக் கொள்ள விரும்பிய ஸ்ரீநாத்தை, தெனாவட்டாக இன்ஸ்பெக்டர் "போய் பெஞ்சில் உட்கார்ந்து, காத்திரு" என்று அடக்கி விட்டாராம். நேரம் பாட்டுக்கு ஓடிக் கொண்டேயிருக்க பாவம், 'தேமே' என உட்கார்ந்திருந்தாராம் ஸ்ரீநாத். திடீரென காவல் துறை சிப்பந்தி ஒருவர் ஸ்ரீநாத்தை அடையாளம் கண்டு கொண்டு இன்ஸ்பெக்டர் காதில் கிசுகிசுக்க, அவருக்கு மூளையில் பல்ப் எரிந்தது. ஸ்ரீநாத்தின் காலில் விழாத குறையாக மன்னிப்பு கேட்டுக் கொண்டாலும் ஸ்ரீநாத் தனக்கு நேர்ந்த அவமானத்தை மறப்பதாயில்லை. விஷயம் வெளியே கசிந்து, காவல் துறை மேலிடம் வரை போய், தற்சமயம் இன்ஸ்பெக்டருக்கு மாற்றல் உத்தரவு. கூடவே பெங்களூர் வந்து உயர் காவல் துறை அதிகாரியிடம் விளக்கம் வேறு கொடுத்தாராம். இதிலிருந்து என்ன தெரிகிறது? கர்நாடக காவல் துறையினர் முழு மூச்சாக மக்கள் சேவைதான் செய்கின்றனர். கிரிக்கெட்டெல்லாம் பார்ப்பதில்லை. ஹி.. ஹி..!



* முதல்வரின் மனைவி - மகள்



* ஸ்ரீநாத்

★ நம்மூரில் தான் பூனைப்படை எலிப்படை எல்லாம். 'சுதந்திரமாக வெளியே போக முடியவில்லை' என வி.ஐ.பி.களின் மனைவி, மக்கள் எல்லோரும் புகார் கொடுப்பார்கள். அப்படியே போனாலும் செக்யூரிட்டி கெடுபிடி. ஆனால் இங்கு பாருங்கள். முதல்வர் கிருஷ்ணாவின் மனைவி பிரேமா கிருஷ்ணாவும் மகள் சாம்பவியும் எம்.ஜி.ரோடில் வறுத்த வேர்கடலையை என்ன காஷுவலாக என்ஜாய் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அக்கம் பக்கம் யாரேனும் கவனிக்கிறார்களா பாருங்கள்! 'தெய்வ தாயே', 'அண்ணியே', 'கடலை தின்னும் காவிரித் தாயே' என்றெல்லாம் போஸ்டர் அடிக்காமல் அப்படி என்ன நாசமாய்ப் போகிற சோம்பலோ?

★ தற்கொலைக்குப் பல காரணங்கள் சொல்லப்படும். வறுமை, ஏமாற்றம், நிராகரிப்பு, வெறுப்பு என வரிசையாக சொல்லிக் கொண்டே போகலாம். சமீபத்தில் பெங்களூர் ஹோட்டல் ஒன்றில் நடந்த தற்கொலை குறித்து ஒரே சஸ்பென்ஸாகவே இருந்தது. ஏனென்றால் அவர் யாரென்றே தெரியவில்லை. காவல் துறையின் தீவிர விசாரணைக்குப் பிறகு இறந்தவர் ஆந்திராவைச் சேர்ந்தவரென்றும் பல் மருத்துவம் படிக்கும் மாணவர் என்றும் தெரிய வந்தது. சரி, 'பல்லாண்டு' வாழ வேண்டிய இவருக்கு என்ன பிரச்னையாம்? இவருக்கு சில காலமாகவே தலை முடி கொட்டிக் கொண்டிருந்ததாம். டாலடிக்கும் வழுக்கையானால், கேலிச் சித்திரமாகி விடுவோமே என பயந்து தற்கொலை செய்து கொண்டுவிட்டாராம்! த்சொ.. த்சொ! மயிர் நீப்பின் உயிர் வாழாத கவரிமானாகிய இவர், இவ்வளவு சென்சிடிவ்வாக இருந்தால், எப்படி குறடு, இடுக்கி பிடித்து பல்லைப் பிடுங்கியிருப்பார்?

— லதா சேகர்




2002 ஜூலை 28
சித்ரபானு ஆடி 12
மலர் : 60
இதழ் : 52

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# வைகோவின் எதிர்காலம்

**வை**கோ கைது கிளப்பியுள்ள சர்ச்சை அரசியல் ரீதியில் பரபரப்பானது; சட்ட ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்தது.

பொடாவை, ஜெயலலிதா அரசியல் உள்நோக்கத்துடன், பழிவாங்கும் உணர்வுடன் பிரயோகித்திருக்கிறார் என்பது பரவலான கருத்து. இந்தக் கருத்தில் ஓரளவு உண்மையும் இருக்கலாம். எனினும் அந்த நடவடிக்கை சட்டத்துக்குட்பட்டுதான் எடுக்கப்பட்டுள்ளது. வைகோவைக் கைது செய்வதற்காக பொடா சட்டத்தை தமிழக அரசு துஷ்பிரயோகம் செய்தது என்றோ, தனக்குச் சாதகமாகத் திரித்து அர்த்தம் செய்து கொண்டது என்றோ கூறிவிட முடியாது.

பொடா சட்டம் என்ன சொல்கிறது; வைகோ கைதான விதம் சரிதானா? என்பது குறித்து சட்ட நிபுணர்களிடையே கூட கருத்து வேறுபாடு உள்ளது. சட்டமே புதிதாகையால் அதை உன்னிப்பாக ஆராய்ந்தவர்கள் குறைவு. ஒரு வேளை தமிழக அரசு வைகோவைக் கைது செய்ததில் ஓரிரு நடைமுறைத் தவறுகள் இருக்கலாம். ஆனால், நோக்கம் தவறானது என்று கூறிவிட முடியாது.

சமீபத்திய பொதுக் கூட்டங்களில் விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாக வெளிப்படையாகப் பேசியவர்தான் வைகோ. அவ்வமைப்புக்கான தமது ஆதரவையும் அனுதாபத்தையும் இன்று நேற்றல்ல... பல ஆண்டுகளாகவே தெரிவித்து வருகிறார்.




ஈழத் தமிழர் நலனில் இந்தியா அக்கறை கொண்டு ஒரு கட்டத்தில் விடுதலைப் புலிகளை ஆதரித்தது உண்மை. ஆனால், ராஜீவ் காந்தி கொலைக்கு பிறகு நிலைமை மாறிவிட்டது. புலிகள் தலைவர் பிரபாகரன், ராஜீவ் கொலை வழக்கில் முதல் குற்றவாளியாகக் குற்றம் சாட்டப் பெற்றவர். புலிகள் இயக்கம் இங்கே தடைசெய்யப்பட்டு விட்டது. அதைத் தொடர்ந்து பெரும் பாலான அரசியல் கட்சிகளும் எல்.டி.டி.ஈ.க்கு ஆதரவை விலக்கிக் கொண்டுவிட்டன.

ஆனால் வைகோவும் வேறு சிலரும் மட்டும் பிரபாகரனையும் அவரது இயக்கத்தையும் வாழ்த்தி வரவேற்றுப் பேசி வருகின்றனர். ம.தி.மு.கவின் கொள்கை விளக்கமும் தேர்தல் அறிக்கையும் தனித்தமிழீழத்தை ஆதரிப்பவைதான். பொடா சட்டம் அமலாவதற்கு முன்பே ம.தி.மு.க. வகித்த இந்த நிலை, தேசியவாதிகளாலும் வன்முறை எதிர்ப்பாளர்களாலும் கடுமையாய் விமர்சிக்கப்பட்டது. தற்போது பயங்கரவாதத்துக்கு எதிரான சட்டம் கடுமையாக்கப்பட்டிருப்பதால் அவர் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

"தடைசெய்யப்பட்ட இயக்கத்துக்கு நான் பொருளோ பணமோ உதவவில்லை; அவர்களின் போராடும் உரிமைக்கு ஆதரவு தருகிறேன். இதில் என்ன தவறு! அவ்வாறு கொள்கை ரீதியில் ஓர் இயக்கத்தை ஆதரித்துப் பேசுவது அடிப்படை மனித உரிமை" என வாதாடுகிறார் வைகோ. அவரது புலிகள் ஆதரவு பேச்சைப் போலவே இந்த வாதமும் அபாயகரமானது.

வைகோ போன்ற தலைவர்கள் ஆளுமையும் செல்வாக்கும் படைத்தவர்கள். அவர்கள் வகிக்கும் நிலையும் பேசும் வார்த்தைகளும் பொது மக்களை எளிதில் சென்றடையும். அவர்களைத் தூண்டியும் விடும்.

புலிகளுக்கு ஆதரவாக வைகோ பேசக் கேட்கும் பலருள் சிலர், அந்த வன்முறை இயக்கத்தின் அனுதாபிகளாக மாறும் வாய்ப்பு நிறையவே இருக்கிறது. உணர்ச்சிவசப்படுகிற, அல்லது மூளைச்சலவை செய்யப்பெற்ற இத்தகைய அனுதாபிகள் மூலமாகத்தான் புலிகளின் இயக் கத்துக்கு ஆதரவும் பொருளுதவியும் போய்ச் சேரும். செல்வாக்குடைய ஓர் அரசியல் தலைவரின்




ஆதரவு, புலிகளுக்குப் போலியான தார்மிக பலத்தைக் கொடுக்கும். இந்தோ – பாக் எல்லையில் பயங்கரவாதம் வளர்க்க பாகிஸ்தான் உதவி வருவதாகக் குற்றம் சாட்டுகிற நாம், அதே தவறை இந்திய – இலங்கை எல்லைப் பகுதியில் செய்தவர்களாகிவிடுவோம்.

இலங்கையிலுள்ள தமிழ்ச் சகோதரர்கள் உரிமையும் சமத்துவமும் எய்தி வாழவேண்டும் என்ற நமது எண்ணம் சரியானது. ஆனால், அவற்றைப் பெற அவர்கள் மேற்கொள்ளும் அழிவுப் பாதையை ஆதரிப்பது அபாயகரமானது. இந்த அபாயம் கருதித்தான் வைகோ பொடாவில் கைதாகியிருக்கிறார்.

தனது நிலையை இனி வைகோ மாற்றிக் கொள்வாரேயானால், அரசியல் ரீதியாகக் கடும் விமர்சனத்துக்கு உள்ளாகி, கோழை என்று முத்திரை குத்தப்படுவார். ஆனால், அவ்வாறு தம் நிலையை அவர் மாற்றிக் கொள்வதே உண்மையில் வீரச் செயலாய் விளங்கும்.

புலிகள் ஆதரவு நிலை கருதி, ம.தி.மு.க.வையே தடைசெய்துவிடப் போவதாக ஜெ. கூறியிருப்பதை மிகையான பேச்சாக ஒதுக்கிவிட முடியாது. அவ்வாறு செய்வதற்கான சட்டரீதியான அதிகாரமும் ஆதரவும் பொடா வழங்குகிறது.

அத்தகைய அதீத நடவடிக்கைக்கு இடமளிக்காமல், வைகோ பாதை மாறுவது, அவரது எதிர்காலத்துக்கும் அவரது கட்சியின் எதிர்காலத்துக்கும் தமிழகத்தின் எதிர்காலத்துக்கும் கூட நல்லது.

உணர்ச்சிவயப்பட்ட புலிகள் ஆதரவு என்ற ஓர் அம்சத்தை மட்டும் நீக்கிவிட்டால், ம.தி.மு.க. அரசியல் அனுபவமும் அமைப்பு ரீதியான பலமும் கொண்ட கட்சி. தமிழகத்தின் எதிர்காலத்தில் ஒரு முக்கிய பங்கு வகிக்கக் கூடிய அரசியல் கட்சியாக அது உருவாக முடியும். இந்தச் சந்தர்ப்பத்தில் மேலும் பிடிவாதம் பிடித்து மோதல்களில் ஈடுபடாமல், 'புலிகள் ஆதரவு'ப் பாதையை விட்டு விலகிவிட்டார்களேயானால் அக்கட்சிக்கு இழப்பு ஏதும் இராது; மக்கள் ஆதரவு என்ற ஆதாயமோ மிக விரைவில் அதிகரிக்கும். ○

▣ வர்ணஜாலம் புரியும் கதவு ஓவியங்கள் காணுகையில் உயிரோட்டம் மிருந்த கவிதைகளை வாசித்து மகிழ்ந்த மனநிறைவு ஏற்பட்டது.

போடி, எஸ்.எம்.பாலசுப்ரமணியன்

▣ 'உலகில் அதிக மசூதிகள் உள்ள இடம் இஸ்தான்புல்' என 'தேன் கூடு' பகுதியில் வெளியாகியிருந்த விருதைராஜாவின் துணுக்கு என்னைப் போன்ற இஸ்லாமிய வாசகர்களுக்கே புதிய தகவல்தான்!

சென்னை, எஸ்.சையது முகமது




▣ 'பத்திரிகைத் துறைக்கு ஆபத்து' தலையங்கம் ஓர் உண்மையான பத்திரிகையாளனின் ஆதங்கத்தை அழகாக வெளிப்படுத்தியிருந்தது. பத்திரிகைத் துறையில் அன்னிய முதலீடு என்பது நெருடலான விஷயம்தான். ஒரு சிலரை திருப்திபடுத்துவதற்காகவே எடுக்கப்பட்ட முடிவாகத்தான் தெரிகிறது.

திருவாரூர், ஆர.இராமசுப்ரமணியன்

## 'வஞ்ச தந்திரம்'யா!

▣ 'எங்களுக்கு வேண்டாம் இன்ஜினியரிங்' என்று மின்னிய அட்டை விஷயத்தைப் பார்த்து ஆர்வமாய்ப் படித்தேன். இஞ்சினியரிங்கை விட மேலான எதையோ படிக்கச் சொல்கிறார்கள் என்று புரட்டினால் இஞ்சினியரிங் கோர்ஸ் படிப்பது பற்றியே இருந்தது!

ச.கோடியூர் சகிலாநாராயண்

▣ என்னதான் கராத்தே தியாகராஜன் மேயராகவே செயல்பட்டாலும், அலறும் மாநகராட்சி மைக் செய்தியில் நீங்களும் அவரை புதிய மேயர் என்றே குறிப்பிட்டிருப்பது எப்படி?

பொன்மலை, ஆர்.பிரகாஷ்

▣ பத்திரிகை துறையில் வெளிநாட்டினரை அனுமதிப்பது, வம்பை விலைக்கு வாங்கும் செயல். நம் நாட்டுப் பத்திரிகைகள் லாப நோக்கம் மட்டுமே கணக்கில் எடுத்து கொள்ளாமல் பாகிஸ்தான் - இந்தியா எல்லைப் பிரச்னை, ராணுவத்தில் ஏற்படும் குழப்பங்கள், குஜராத் போன்ற இடங்களில் நடக்கும் மதப் பிரச்னைகளை தேசப்பற்றுடன் வெளியிடுகின்றன. இதை, நாம் வெளிநாட்டுப் பத்திரிகையிடம் எதிர்பார்க்க முடியாது.

சென்னை, ஆர்.நாகராஜன்

▣ பஞ்ச நாயகர்களை விட்டுவிட்டு, ரம்யா கிருஷ்ணன் நடிப்பை மட்டும் பாராட்டிய விதம் 'வஞ்ச தந்திரம்'யா.

அயன்புரம், த.சத்தியநாராயணன்

▣ வர்ஷா எழுதிய 'இது வேறு மழை' சிறுகதையின் முடிவு வெகு யதார்த்தம்.

நெய்வேலி, க.சுந்தர்

▣ 'அரசு அலுவலகங்களில் எம்.பி., எம்.எல்.ஏ.க்கள் வந்தால் அதிகாரிகள் எழுந்து நின்று வரவேற்க வேண்டும் என்ற உத்தரவு இன்று' என்று தராசு பதில் அளித்திருப்பது தவறு. அந்த உத்தரவை முதன் முதலில் பிறப்பித்தவர் பெரியவர் பக்தவத்ஸலம். இந்தப் பிழை கவனக் குறைவால் ஏற்பட்டதா அல்லது ஜெயலலிதாவைத் தாக்குவதற்காக எழுதப்பட்டதா என்பது ஆராய்ச்சிக்குரியது.

சென்னை, ஏ.எஸ்.அசோக்கீர்த்தி

• அம்மாவை 'வலம்' வந்து வணங்கி, வலம்புரிஜான் எழுதிய மடலும், அதற்கு தராசு அளித்துள்ள கமெண்டையும் பார்த்தேன். திகைப்பூண்டை மிதித்தவன்போல் ஆனேன். எனக்கு ஒரு பழமொழி நினைவுக்கு வந்தது. 'ஜாண்' ஏறினால் முழம் சறுக்கும் என்பார்கள். இங்கே ஜான் ஏறாமலேயே இறங்கி இருக்கிறார். ஜான் நீங்களுமா...?? சொல்லின் செல்வர், வார்த்தைச் சித்தர்.. அதனால் எழுதினேன்.

புதுதில்லி, சுப்புடு

# தேன் கூடு





இந்தியாவின் கடற்கரை ஆறாயிரம் கிலோமீட்டருக்கும் நீண்டது. இதில் மொத்தம் நூற்று அறுபது துறைமுகங்கள் உள்ளன. இவற்றில் பன்னிரண்டு பெரியவை. மற்றவை சிறிய துறைமுகங்கள். இதில் ஆறு துறைமுகங்கள் சுதந்திரத்திற்கு முன்பே சிறப்பாகச் செயல்பட்டவை. மீதி ஆறு துறைமுகங்கள் சுதந்திரம் கிடைத்த பின் மத்திய அரசால் உருவாக்கப்பட்டவை. கடல் வழியே, சுமை ஏற்றி வியாபாரம் செய்வதில் இந்தியா உலகில் பதினேழாவது இடத்தில் உள்ளது.

நம் நாட்டிலிருந்து வெளிநாட்டிற்கான வியாபாரம் 90 சதவிகிதம் கப்பல்கள் மூலமே நடைபெறுகின்றன.

கொல்கத்தா, மும்பை, சென்னை, கொச்சின், விசாகப்பட்டினம் மற்றும் மர்மகோவா ஆகியவை பழைய துறைமுகங்கள்.

கண்டிலா, நியூமங்களூர், பராதீப், தூத்துக்குடி, எண்ணூர் மற்றும் ஜவஹர் யார்ட் டிரஸ்ட் ஆகியவை புதிய துறைமுகங்கள்.

நன்றி: 'ஸ்வாகத்'
– ராஜி ராதா, திருச்சி.

டயானா தனது உயிலில் விட்டுச் சென்ற சொத்தின் மதிப்பு 21.5 மில்லியன் பவுண்டுகள்.

- மஞ்சுதேவன், அமிரோலி

கும்பகோணத்தில் நடுநாயகமாய் விளங்கும் 'வியாழ சோமநாதர்' ஆலயத்தில் தனிச் சந்நிதி கொண்டுள்ள முருகப் பெருமான் காலில் பாதரட்சையோடு காட்சி தருகிறார்.

- மா. உலகநாதன்,
திருநிலக்குடி

# துப்பாக்கி யாருக்கு?

• வாழ்க்கை என்ன வென்று நாம் தெரிந்து கொள்ளுமுன்





• வியாழ சோமநாதர்



அதில் பாதி கழிந்து விடுகிறது.

● வாழ்க்கையின் முற்பகுதி இரண்டாம் பகுதியை விரும்புவதில் கழிகின்றது. இரண்டாம் பகுதி முதற் பகுதிக்காக வருந்துவதில் கழிகின்றது.

- பிரெஞ்சு

● பிறக்கும்பொழுதே அழுதோம்; ஏன் அழுதோம் என்பதை ஒவ்வொரு நாளும் உணர்கிறோம்.

- ஆப்ஜியம்

நாம் வாழத் தொடங்கிக் கொண்டே இருக்கிறோம். ஆனால் வாழ்வதில்லை.

- லத்தீன்

ஆதாரம்: - 'உலகப் பழமொழிகள்' நூல் தொகுப்பு: ராஜா முகம்மது, திருத்துறைப்பூண்டி.

**சி**தம்பர ரகசியம் என்று குறிப்பிடுகிறார்களே... அப்படி என்றால்? 'ஒன்றுமில்லை' என்றுதான் அர்த்தம். பஞ்ச பூத லிங்கங்களுள் ஒன்றான ஆகாயலிங்கமாக இறைவன் சிதம்பரத்தில் குடி கொண்டிருக்கிறார். ஆகாயம் எப்படி உருவமற்றதோ, அதே போல அந்த லிங்கமும் உருவமில்லாமல் இருக்கிறது. இதைத்தான் 'சிதம்பர ரகசியம்' என்கிறார்கள்.

- ஆர்.எம். மாதவன், சிதம்பரம்.

**கோ**பமாய்ப் பேசினால் குணத்தை இழப்பாய். அதிகமாய்ப் பேசினால் அமைதியை இழப்பாய். வெட்டியாய்ப் பேசினால் நேரத்தை இழப்பாய். வேகமாகப் பேசினால் அர்த்தத்தை இழப்பாய். ஆணவமாய்ப் பேசினால் அன்பை இழப்பாய். பொய்யாய்ப் பேசினால் நற்பெயரை இழப்பாய். இத்தனை இழப்புகளையும் தவிர்த்தால் வாழ்வு இன்பமாகும்.

- (வாடகை கார் ஒன்றின் பின்பகுதியில் எழுதியிருந்தது)

- பொள்ளாச்சி கவின்

**ஒ**ருவர் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார் ஒரு நிகழ்ச்சியில். அப்போது பார்வையாளர்கள் வரிசையில் முதலாவதாக அமர்ந்திருந்த ஒருவர் தம் கைப்பையிலிருந்து துப்பாக்கியை எடுக்க, பேச்சாளர் பயந்துபோய் சுட்டு விடாதே... பேச்சை நிறுத்திக் கொள்கிறேன்'' என்றார்.

''இது உங்களைச் சுட இல்லை'' என்று அவர் கூற, பேச்சாளர் ''பின் எதற்கு துப்பாக்கியை எடுத்தாய்?'' என்று கேட்க, பார்வையாளர், ''உம்மைப் பேச அழைத்தவர்களைச் சுட'' என்றார்!

- ஸ்ரீரங்கம் பி.ஆர். பார்த்தசாரதி.

**ஸ்**விட்சர்லாந்தில் உள்ள ஜெனீவா ஏரி பிறைச்சந்திரன் வடிவில் அமைந்துள்ளது. இந்த ஏரியின் நடுவில் ஓர் அழகிய நீரூற்று உள்ளது. இந்த நீரூற்று 145 மீட்டர் உயரத்திற்குப் பீறிட்டுப் பாய்வது கண் கொள்ளாத காட்சி. உலகிலேயே மிக உயரமான நீரூற்றாகக் கருதப்பட்டு வந்த இதற்குப் போட்டியாக, சியோல் நகரில் 202 மீட்டர் உயரம் பாயும் நீரூற்றை ஏற்படுத்தி, முதல் இடத்தைப் பிடித்துவிட்டனர்!

- அபுதாபி சித்ரா நாராயணன்

உ



ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி ஸமேத

# ஸ்ரீஸற்குணேச்வரர் ஆலயம்

ஸற்குணேஸ்வரபுரம் : கருவேலி - 609 501.



*****

## அஷ்டதின ஸ்ரீருத்ரத்ரிசதீ, ஸ்ரீலலிதாத்ரிசதீ அர்ச்சனைகள்

மற்றும்

## பன்னிரு திருமுறை பாராயணம்

**சித்ரபானு வருஷம் ஆடி மாதம் 19ம் தேதி (4.8.02) ஞாயிறு முதல் 26ம் தேதி (11.8.02) ஞாயிறு முடிய எட்டு தினங்கள்**

**காலை மணி 9 முதல் பகல் 12.30 மணி முடிய**
**மாலை மணி 4 முதல் இரவு மணி 8.30 முடிய**

அன்புடையீர்!

குருவருள் திருவருள் துணை கொண்டு தங்களைப் போன்ற மெய்யன்பர்களின் ஒத்துழைப்புடன் கருவேலி என்று அழைக்கப்படும் ஸற்குணேசவரபுரத்தில் மகிழ்வுடன் வீற்றிருந்து அருள்பாலிக்கும், **ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரீ ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வரப் பெருமானின்** திருவடிவாரத்தில் பல சிறப்பு வழிபாடுகளும், ஹோமங்களும் பாராயணங் களும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இவ்வாண்டு இத்தலத்தில் அம்பிகையின் அருளாணையின் வண்ணம் தஞ்சாவூர், ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீவித்யாகணபதி உபாஸனா யோக பீடாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீவித்யாகணேச ஸ்வாமிகள் தலைமையில் 400 ஆவ்ருத்தி ஸ்ரீருத்ர, ஸ்ரீலலிதா த்ரிசதீ மந்த்ரார்ச்சனைகள் நடைபெற இருக்கின்றன. ''முற்றோதல்'' எனப்படும் பன்னிரு திருமுறை பாராயணமும் நடைபெற இருக்கிறது.

ஸ்ரீ ருத்ர த்ரிசதியையும், ஸ்ரீலலிதா த்ரிசதியையும் சேர்த்து செய்வது தான் முறை என்பதாலும், அதுவே விசேஷ பலன்களை அளிக்கும் என்பதாலும் இரு த்ரிசதீ அர்ச்சனை களுக்குமாகச் சேர்த்து ரூ. 200/- காணிக்கையாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதில் பங்கு பெறும் எல்லா பக்தர்களுக்கும், இரு புறங்களிலும் பீஜாக்ஷரங்கள் பொறிக்கப்பட்ட வெள்ளிக்காசு ரக்ஷையாக கொடுக்கப்படும்.

அர்ச்சனைகளில் பங்கு பெற விரும்பும் பக்தர்கள் கீழ்க்கண்ட முகவரிகளில் ஏதேனும் ஒன்றில் காணிக்கையை நேரிலோ / மணி ஆர்டர் மூலமோ செலுத்தி, தத்தம் பெயர், நக்ஷத்திரம், ராசி, கோத்ரம் இவற்றை பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம். நிர்வாக ஸௌகர்யம் கருதி பக்தர்கள் 25.7.02க்குள் தங்கள் காணிக்கைகளை அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,
என்றும் இறைப்பணியில்
ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா
கும்பகோணம் – கருவேலி.

Dr. V. Krishnamurthy
*Hereditary Trustee*

### காணிக்கை அனுப்பப்பட வேண்டிய முகவரிகள்:

G. குஞ்சிதபாதம் FCA, ஆடிட்டர், G. நடேசன் & கோ., டபீர் மேல வீதி, கும்பகோணம் - 612 001. போன்: 0435-420047. G. கண்ணன், D-127/A, ராஜமன்னார் சாலை, கே.கே.நகர். சென்னை - 600 078. போன்: 044 - 4836495. K. வைத்யநாதசாமி H.M.,(Retd) 24, பச்சையப்பா தெரு, (உடையார் காலனி) கும்பகோணம் - 612 001. போன்: 0435-435772. M.S. ராமசாமி, 77, செம்பருத்தி தெரு. திருநகர், தஞ்சாவூர் - 9. போன்: 04362 - 323350. A.K. சுப்ரமணியன், 1. முதலாவது குறுக்குத் தெரு, பிளாட் எண். 72, 1, கனகதாரா நகர், வளசரவாக்கம், சென்னை - 600 087. போன்: 044-4865335. A. சந்த்ரமௌலி, 9A, வெள்ளைபிள்ளையார் கோவில் தெரு, S.S. காலனி, மதுரை -10. போன்: 0452 - 601464

அப்பா இறந்த செய்தி செல்விக்கு இரவு பன்னிரண்டு மணிக்குத் தொலைபேசி மூலம் தெரிவிக்கப்பட்டது. செல்வியின் வீட்டில் தொலைபேசி இல்லை. செல்வியின் பக்கத்து வீட்டுக்கு, செல்வியின் அண்ணன் தகவல் சொன்னான்.

"ஸாரி மேடம்.. நேரங்கெட்ட நேரத்துல எழுப்பினதுக்கு.. நான் செல்வியின் அண்ணன். அப்பா தவறிட்டாரு... கொஞ்ச நேரத்துக்கு முன்னே ஹார்ட் ஃபெயிலியர் ஆயிடுச்சு. தயவு பண்ணி சொல்லிடுங்க..'' என்று சொல்லிவிட்டு டெலிபோனை வைத்து விட்டான்.

பத்மாவுக்கு அதிர்ச்சியாகிவிட்டது. செல்வியின் அப்பாவை அவளுக்கு நன்றாகத் தெரியும். செல்விக்கு அப்பா என்றால் உயிர். எப்போதும் "அப்பா... அப்பா..'' என்று தகப்பனாரைப் பற்றிய பேச்சுதான்.

"இந்தப் பெண்ணுக்கு அப்பாவின்மீது இத்தனை ஈர்ப்பா?'' என்று பத்மா வியப்பாள். பத்மா தன் அப்பாவோடு அதிகமாகப் பேசியதில்லை. வயசுக்கு வருவதற்கு முன் பேசியதோடு சரி. சடங்கான பிறகு பத்மா, அப்பாவோடு பேசக்





# மீசைக்கார அப்பா!

கூச்சப்படுவாள். அப்பாவும் கெத்தாக இருப்பார். சகஜமாகப் பேசமாட்டார். அப்பா என்றாலே பத்மாவுக்கு ஒரு விதமான அச்சம். "ஆனால் இந்த செல்வி எதற்கெடுத்தாலும் அப்பா அப்பா என்று மாய்ந்து போகிறாள்" என்று வியப்பாள்.

செல்விக்குச் சொந்த ஊர் மதுரை... இங்கே ராஜபாளையத்தில் மணம் முடித்து இருக்கிறார்கள். செல்வியின் அப்பா சப்-இன்ஸ்பெக்டர். செல்வியைப் பார்க்க

**யோகி**

வருவார். ஊருக்குப் போகும்போது செல்வி அப்பாவை பஸ்ஸ்டாண்ட் வரை சென்று வழி அனுப்பி விட்டுத்தான் வருவாள். "எங்க அப்பாவை மாதிரி யாரும் இல்லை..." என்பாள்.

"பெருமையாக எப்பவும் அப்பா புராணம் பாடுறியே... உன் புருஷனுக்குக் கோபம் வராதா..?" என்று கேட்பாள் பத்மா.

"வரும்" என்று சிரிப்பாள்.

பத்மாவுக்கு அச்சமாக இருந்தது.

'சாவுத் தகவலை எப்படிச் சொல்வேன்? செல்வி தாங்குவாளா? அப்பா என்றால் உயிராயிற்றே. "அம்மா எல்லாம் சும்மா. எனக்கு அப்பாதான் எல்லாம்." ' என்பாளே!

**க**தவைத் திறந்து கொண்டு வெளியே

வந்தாள். அப்போதுதான் ஞாபகம் வந்தது. செல்வியின் கணவர் வேலை நிமித்தமாய் வெளியூர் சென்றிருப்பது. செல்வியின் கணவர் விற்பனைப் பிரதிநிதியாக இருக்கிறார். செல்வியின் வீட்டுக் கதவைத் தட்டினாள் எழுந்து வந்து கதவைத் திறக்க கொஞ்சம் நேரம் ஆயிற்று. கதவு அருகே நின்றபடியே கதவைத் திறக்காமல் "யாரு... யாரு.." என்று இரண்டு தடவை கேட்டாள் செல்வி.

"நான்தான் பத்மா வந்திருக்கேன்."

"என்னக்கா?" செல்வி கேட்டாள்.

இரண்டு பேருக்கும் ஒரே வயசுதான். இருந்தாலும் பத்மா இரண்டு குழந்தைகளுக்குத் தாய் என்பதால் பத்மாவை, அக்கா என்றுதான் அழைப்பாள். "முக்கியமான விஷயம்.. கதவைத் திற.." என்றாள்.

செல்வி கதவைத் திறந்தாள்.

"உள்ளே வா." என்று செல்வியை இழுத்துக் கொண்டு உள்ளே வந்தாள்.

"என்னக்கா?"

எப்படிச் சொல்வது என்று தெரியாமல் விழித்தாள்.

"என்னக்கா?"

"உங்கப்பாவுக்கு உடம்பு சரியில்லையாம். ரொம்ப சீரியஸாம். ஆஸ்பத்திரியில் சேர்த்து இருக்காங்களாம். உன்னை உடனே வரச் சொல்லி உங்க அண்ணன் ஃபோன் பண்ணினார்."

"அண்ணன் ஃபோன் பண்ணுச்சா? அப்பாவுக்கு என்னாச்சு? வேறே என்ன சொல்லுச்சு அண்ணே.." பதறினாள் செல்வி.

"ஹார்ட் அட்டாக்காம். உடனே வரச் சொன்னாங்க.." என்றாள் பத்மா.

"அய்யோ அக்கா... அவரும் ஊருல இல்லையே. என்ன பண்ணுவேன். அக்கா உங்க வீட்டுக்காரர்கிட்டே சொல்லி நீங்க எனக்குத் துணைக்கு வாங்க. அவரு வந்ததும், உங்க வீட்டுக்காரர் தகவல் சொல்லட்டும். வாங்கக்கா. நான் அப்பாவைப் பார்க்கணும்.." என்று அழத் துவங்கிவிட்டாள்.

'அப்பாவுக்கு உடம்பு சரியில்லை' என்று சொன்னதற்கே இத்தனை அழுகை என்றால் இறந்தது தெரிந்தால்... அய்யோ கடவுளே.. இவள் என்னை வேறு கூப்பிடுகிறாள். நான் வர மறுத்தால் இவள் இங்கேயே இருந்து விடக்கூடும்.' செல்வியை அழைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

பத்மாவின் கணவனே பஸ் ஸ்டாண்ட் வரை வந்து வழி அனுப்பினார்.

"பார்த்துப் போங்க. இரண்டு பொம்பளைங்களா போறீங்க. மதுரை பஸ் ஸ்டாண்ட்ல இறங்கி ஆட்டோவுல போகாதீங்க. நிலைமை சரியில்லை. டவுன் பஸ்லேயே போங்க. மதுரையிலே நைட் சர்வீஸ் பஸ் எப்போதும் உண்டு" என்று சொல்லி அனுப்பினார்.

"அப்பா ரொம்ப சிகரெட் பிடிப்பார். அதான் ஹார்ட் அட்டாக் வந்துடுச்சு." என்றாள் திடீரென்று. "அப்பாவுக்கு ஒன்றும் ஆகாது.." என்று தனக்கு தானே பேசிக் கொண்டாள்.

பத்மாவுக்கு தன் அப்பா இறந்த நாள் ஞாபகத்துக்கு வந்தது. அப்பா தவறிவிட்ட சேதியை, சுப்பையா சித்தப்பா தான் வந்து சொன்னார். அவளுக்கு அழத் தோன்றவில்லை. அவர் இருந்தபோது எந்த சந்தோஷமும் இல்லாமல் இருந்தது. இறந்தபின் எந்த வருத்தமும் இல்லாமல் போனது.

ஒரு தடவை செல்வி சொன்னாள். "அப்போ எனக்கு அஞ்சு, ஆறு வயசு இருக்கும். 'மீசைக்காரா'னு கூப்பிடுவேன். அப்பா முத்தம் கொடுக்கும்போது மீசை குத்தும். அப்பா போலீஸ்காரராச்சே. கடா மீசை வைச்சிருப்பார். 'குத்துது... நான் அப்பாக்கிட்ட போகமாட்டேன்'னு அழுதேனாம். மறுநாளே அப்பா மீசையைத் துப்புரவா எடுத்துட்டார். "மனுஷன் கல்யாணம் பண்ணி குழந்தை பெத்துக்கிட்டதும் தியாகம் பண்ணப் பழகிக்கணும்'னு அப்பா அடிக்கடிச் சொல்வார். மீசை அப்பா எனக்காகச் செய்த முதல் தியாகம்" என்பாள் செல்வி.

செல்வி தன்னுடைய அப்பாவைப் பற்றிப் பேசும்போதெல்லாம், பத்மா தன்னுடைய அப்பாவை நினைத்துப் பார்த்துக் கொள்வாள். அப்பா தனி பிறவி. பிள்ளைகள் பட்டினி கிடந்தாலும் பரவாயில்லை. தன் வயிறு நிறைந்தால் போதும் என்று நினைப்பார்.

"ஒரு தடவை நானும் அப்பாவும் ரோட்டுல நடந்து போயிட்டு இருந்தோம். ஒரு மனிதர் கல் தடுக்கி கீழே விழுந்துட்டார். நான் 'ஷேம்... ஷேம்.. பப்பி ஷேம்'னு சிரிச்சு குதித்தேன். அப்போ எனக்கு பத்து வயசு இருக்கும். அப்பா என்னைத் திட்டினார். கீழே விழுந்தவர். "பரவாயில்லை. சின்னப் புள்ளைதானே. விடுங்க சார்" என்றார்.

ஆனா அப்பா என்னை இலேசுல விடல. இட்டிக்கிட்டே இருந்தார். புத்திமதி சொன்னார். பிறர் விழுவதைப் பார்த்து நாம சிரிச்சா, நாம விழுவதைப் பார்த்து இன்னொருவன் சிரிப்பான். யாருக்கும் யார் மேலேயும் அனுதாபம் இல்லாமல் போயிடும். அப்புறம் மிருகங்களாத்தான் இருப்போம்னு சொன்னார். இதெல்லாம் பத்து வயசு பொண்ணுக்குப் புரியுமான்னு அவர் நினைக்கலை. அப்புறம் ரோட்டுலயும் சரி, வாழ்க்கையிலும் சரி, யார் தடுக்கி விழுந்த போதும் நான் சிரிக்கலை. பல சமயம் வியப்பேன். அப்பாவோட சுபாவத்துக்கும் அவர் உத்யோகத்துக்கும் சம்பந்தமே இல்லைன்னு. ஆனா இந்த மாதிரி சுபாவம் உள்ளவங்களும் போலீஸ் துறைக்குத் தேவைன்னு நினைச்சுப்பேன்.'' என்றாள் செல்வி.

பஸ்ஸிலும் செல்விக்கு அப்பா நினைப்பு தான். ஓயாமல் பேசிக் கொண்டே வந்தாள்.

''அப்பா ஒரு சிறந்த கவிஞர். ஆனா அம்மாவுக்குக் கழுதையைத்தான் தெரியும். கவிதைன்னா என்னன்னு தெரியாது. நான் கூட அம்மாவைத் திட்டுவேன். என்னம்மா நீ இப்படி இருக்கே. அப்பாவை இன்சல்ட் பண்ற மாதிரி ஞான சூன்யமா இருக்கேன்னு. அப்பா மேலே பேசவிடாம என்னைத் தடுப்பார். அவளோட சுபாவம் அது. அவ அப்படியே இருக்கட்டும். அப்படி அவ பாசாங்கு இல்லாம இருக்கிறது தான் எனக்குப் பிடிச்சிருக்கு.'' என்பார்.

''எத்தனை அருமையான அப்பா. நிச்சயம் அப்பாவுக்கு ஒண்ணும் ஆகாது'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

பத்மாவுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. செல்வியைத் தன் தோளில் சாய்த்துக் கொண்டாள்.

''ஒரு சமயம் - நான் காலேஜ்ல படிக்கும் போது ஒரு பையனை லவ் பண்ணினேன். அப்பாவுக்குத் தெரிஞ்சு போச்சு. ''படிச்சு முடி. அவனையே கல்யாணம் பண்ணிக்கோ''ன்னு சொன்னார். வேறே ஒண்ணும் பேசலை. கொஞ்ச நாள்ல காதல் என்பது வெறும் மாயை என்று புரிஞ்சுது. ஒரு வேளை அப்பா காச்சு மூச்சுன்னு கத்தி அடிச்சு உதைச்சு இருந்தாருன்னா நான் அவன்கூட ஓடிப் போய் இருப்பேன்... என்று செல்வி சொன்னபோதுத் பத்மாவுக்கு, தன் தகப்பனின் ஞாபகம் வந்தது.

ஜன்னல் பக்கம் நின்று வேடிக்கை பார்த்தாலே கடும் கோபம் வரும் பத்மாவின் அப்பாவுக்கு.

''அப்பாவுக்கு ஒண்ணும் ஆகாது. இல்லேக்கா?'' திரும்பக் கேட்டாள் செல்வி.

''சீரியஸ்னு சொன்னாங்க...'' என்று மழுப்பினாள்.

''சீரியஸ்னா என்ன? அப்பா பிழைச்சுப் பார்... அப்பா பிழைச்சுப்பார்.. அப்பாவுக்கு ஒண்ணும் ஆகாது... ரெண்டு மூணு தடவை ஹார்ட் அட்டாக் வந்தவங்களே பிழைச்சிருக்காங்க. எழுபது, எண்பது வயசுக்காரங்களே கல்லு மாதிரி இருக்காங்க. அப்பாவுக்கு ஐம்பத்து மூணு வயதுதான் ஆகுது. அதுவும் எக்சர்சைஸ் பாடி... அப்பாவுக்கு ஒண்ணும் ஆகாது.'' தனக்குள்ளாகப் புலம்பினாள்.

'எப்படித் தெரிவிப்பது. அங்கு போய்ச் சேர்ந்தபின் அவளாகத் தெரிந்து கொள்ளட்டும்.'

மதுரை பஸ் ஸ்டாண்ட் வந்துவிட்டது. மெள்ள இறங்கினார்கள். பத்மாவுக்கு பக்பக்கென்று அடித்துக் கொண்டது. செல்வியால், அப்பாவின் இழப்பைத் தாங்க முடியுமா? அந்த இரவிலும் நைட் சர்வீஸ் டவுன் பஸ்ஸில் கூட்டமாய்த்தான் இருந்தது.

பஸ் பிடித்து வீடு வந்து சேர்ந்தபோது - பந்தல் போட்டு கொண்டிருந்தார்கள். வீட்டின் முன், வரிசையாய் சேர்கள். மரப் பெஞ்சுகள். மஞ்சள் பல்பு எரிந்து கொண்டிருந்தது.

செல்விக்குப் புரிந்துவிட்டது.

''பொய் தானேக்கா சொன்னே... அப்பா தவறிட்டார்ல?...''

பத்மாவின் தோளைப் பிடித்துக் கொண்டு அழுதாள்.

''அப்பா பிழைச்சுப்பார். உயிரோட இருக்காருன்னு நம்பி வந்தேன். அங்கேயே இறந்தது தெரிஞ்சிருந்தா அழுகையோடு போயிருக்கும். அப்பா உயிரோட இருக்காருன்னு நம்பி வந்து இப்ப ஏமாத்தமாப் போச்சு. அப்பா...'' என்று பெருங்குரலெடுத்து அழ ஆரம்பித்தாள் செல்வி.

பத்மாவுக்கும் அழுகை வந்தது. தன் அப்பா இறந்த அன்றுகூட வராத அழுகை. ●



# ஆ... ஆ... தானே வரணும்? ஓ... ஆ... வருமாமே!

ரொட்டியை உப்பச் செய்வதற்கும், சில உணவுப் பொருட் களைப் புளிக்க வைப் பதற்கும் உப யோகமாகும் மஞ்சள் நிறப் பொருளான 'ஈஸ்ட்'டில் புரதச் சத்தும், பி வைட்டமின்களும் இருக்கின்றன. இரத்த அழுத்தத்தை முறைப்படுத்தும் குரோமியம் எனப்படும் தாதுச் சத்தும் இருக்கிறது. வைட்டமின் பி-12? ஆகா, இருக்கிறது சைவ உணவுக்காரர்களுக்கு



ஈஸ்ட் நிறையவே வைட்டமின் பி-12 தருகிறதாம். ஆனால் ஓர் எச்சரிக்கை: மனச் சோர்வுக்கு ஆன்ட்டி டிப்ரஸண்ட் மாத்திரைகள் உட்கொள்ளுவோர், 'ஈஸ்ட்'டின் பக்கம் தலை வைத்துக் கூடப் படுக்காதீர்கள். உயர் இரத்த அழுத்தம் முதலிய பயங்கர பக்க விளைவுகள் ஏற்படும்.

ஈஸ்ட் தரும் கலோரிகளும் கூடுதலானவை!

● அதிகச் சத்து, எருமைப்பாலை விட பசும்பாலில்தான் இருக்கிறது. பசும்பாலில், நூறு மில்லி லிட்டரில்

நாற்பத்தைந்து மைக்ரோ கிராம் வைட்டமின் ஏ இருக்கிறது. எருமைப் பாலில் பன்னிரண்டு மைக்ரோகிராம்தான். பசும்பாலில் நூறு மி.லி, 3.5 சதவீதம் கொழுப்புச் சத்து இருக்கிறது. எருமைப் பாலிலோ 7.4 சதவீதம் இருக்கிறது! சத்து நமக்குத் தேவை; கொழுப்புச் சத்து அல்ல!

● சிநேகிதமான பாக்டீரியா சிலவற்றை நம் உணவில் சேர்க்கலாம். மோர், லஸ்ஸி-யில் இவை இருக்கின்றன. இதை ப்ரோ-பயோடிக் என்பார்கள். மாம்பழ லஸ்ஸி ட்ரை பண்ணிப் பாருங்களேன்; அரை கப் மாம்பழக் கூழ்; முக்கால் கப் தயிர்; அரை டேபிள் ஸ்பூன் சரக்கரை; சில துளி வெனிலா எசென்ஸ்;அரை கப் தூள் ஐஸ் அடித்துக் கலக்கி, உடனே



# கல்கி

## VBC Jewellery

House of Vummidi

★ 78, G.N.Chetty Road, Vani Mahal Circle, (Opp. Hotel Residency), T.Nagar, Chennai - 600 017.
✆ : 8229556, 8229560

★ 11-B, Nageswara Rao Road, Panagal Park, T.Nagar, Chennai - 600 017. ✆ : 4342407, 4346297

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

### சிம்ரனுக்கு உதவுங்கள்!

“ ‘பஞ்ச தந்திரம்’ படத்தில் நடித்ததற்காக ஒரு பைசா கூட சம்பளம் தரவில்லை. அதை எப்படி வாங்குவது என்று தெரியவில்லை” என்று சிம்ரன் தடாலடி குண்டு போட்டதில் ஒரே ரகளை! அந்தப் பணத்தை வாங்குவது எப்படி என்று வாசகர்கள் ஜாலியான ஐடியாக்கள் கொடுத்து சிம்ரனுக்கு உதவலாமே! தமாஷ் யோசனைகள் இரண்டுக்கு தலா நான்கு கிராம் தங்கம் பரிசு

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**புன்னகைப் போட்டி - 24**

என்று குறிப்பிட்டு முகவரியைக் குறிப்பிடுங்கள். தபால் உறை அல்லது தபால் கார்டில், கீழே உள்ள கூப்பனை வெட்டி ஒட்டி அனுப்புங்கள்.

கடைசி தேதி : **5.8.2002**

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 097.**

பரிமாறுங்கள். விருந்தினர் ருசித்துக் குடிப்பார்கள். இந்த ப்ரோ-பயோடிக்கினால் உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி கூடுகிறது என்பது மட்டுமல்ல; வயிற்றுக் கோளாறுகளுக்குச் சாப்பிடும் ஆன்டிபயாடிக் மருந்துகளின் பக்க விளைவுகளை, இந்த ப்ரோ-பயோடிக் ஒரு கை பார்த்துவிடும்!

● ‘வயசாச்சு’ என்று ஈஸிசேரில் காலை நீட்டிக்கொண்டு உட்காராமல், வாக்கிங், மாடிப்படி ஏறுதல் (ஏறினா இறங்கியும் ஆகணும்ங்க!) டான்ஸிங், தோட்ட வேலை எல்லாம் பண்ணலாம். டான்ஸிங்னா வீட்டுக்குள்ளேதான். ஸ்டேஜ்ல இல்ல. (அதுக்குத்தான் நிறையப் பேர் இருக்காங்களே!) கரும்பச்சைக் கீரை வகைகள், சிவப்பு கோஸ், லெடிஸ் கீரை இவற்றை உணவில் சேர்த்துக் கொள்ளலாம். கால்ஷியம் சத்து இருக்கிறது. கீரை வகைகளில் வைட்டமின் கே, மக்னீசியம் எல்லாம் இருக்கின்றன.

● காபி, பிளாக்டீ, கோலாவிலிருக்கும் காஃபீன் மற்றும் மது வகைகள், எலும்புகளை வலு இழக்கச் செய்யும். எலும்புக்குத் தேவையான கால்ஷியம் முதலிய தாதுச் சத்துக்களை சிறுநீர் வழியாக வெளியேற்றிவிடும். ஆல்கஹாலோ, கோலாவோ, அடிக்கடி காபியோ பருகும்போது இது நினைவுக்கு வந்தால் நல்லது!

● குழந்தைகளுக்கும் ருமட்டாய்டு ஆர்த்ரைடிஸ் வருவதுண்டு. ஆயிரத்தில் ஒரு குழந்தைக்கு ரு.ஆ வரும். துரதிர்ஷ்டவசமாக, டாக்டர்கள் உட்பட, பலரும் இதை அறிவதில்லையாம். சில குழந்தைகள் பல மாதங்களாக, ஏன் வருடங்களாகக் கஷ்டப்படுவதுண்டு, கண்டுபிடித்துச் சிகிச்சை துவங்கும் வரை, மிகுந்த கவலை அளிக்கும் ரகம். கவனமாகப் பராமரித்தால் கவலைப்படத் தேவையில்லை.

தொகுப்பு: எஸ்.வி.என்.
(நன்றி: ‘ஹெல்த்’)

# என்ன சொல்ல?

**யா**ருக்கும் இப்படி நேரக்கூடாது என்றுதான் அந்த நேரத்தில் எல்லா தெய்வங்களையும் வேண்டிக் கொண்டான்.

இப்படியெல்லாம் ஆகுமா, இதெல்லாம் தேவைதானா என்று யோசித்த மனசுக்கு வாழ்க்கையின் ஓட்டத்தில் இது இப்படித்தான் என்று தீர்மானிக்க முடியவில்லை. ரயில் நிலையத்தில் அத்தனைப் பேரும் தன்னை வேடிக்கைப் பார்க்க, அம்மா அழுவாள் என எதிர்பார்க்கவில்லை.

"என்னை டாக்டர்கிட்ட கூட்டிப் போகக் கூட உனக்கு நேரமில்லையாடா" என்றுதான் பிரச்னையைத் தொடங்கினாள். வேலையை ஒதுக்கிவிட்டு வந்த போது, 'கிடக்குது; அப்புறம் போகலாம்' என்று பிடிவாதமாக மறுத்தாள். வலுக்கட்டாயமாக டாக்டரிடம் கூட்டிப் போனான். 'அறுபத்தஞ்சு வயசாச்சு. அது தான் பிரச்னை. வேறே ஒண்ணுமில்லை' என்றார் டாக்டர். மருத்துவமனை கேண்டீனைக் கடக்கும்போது மசால்தோசை வாசனை தூக்கியது.

"தோசை வாங்கித் தருவியா" என்று குழந்தை போல கேட்டாள். அதைச் சாப்பிட்டதும் குழந்தை மாதிரிதான்.

இரண்டு மாதங்களுக்கு எந்த முணுமுணுப்பும் இல்லை. குழந்தையுடன் தானும் ஒரு குழந்தையாகக் கொஞ்சி, மழலை பேசிக் கொண்டிருந்தாள். அப்புறம் பழைய பல்லவி தொடங்கியது.

"மனசே சரியில்லைடா, ஊருக்குப் போறேன்!" என்று நச்சரிக்க ஆரம்பித்து விட்டாள். தட்டிக் கழித்தும் பயனில்லை. "அங்கே என்ன பண்ணுவே? யாரு இருக்கா?" என்றான். அம்மா காதிலேயே வாங்கவில்லை. நாளொரு காரணம் சொன்னாள்.

'போகிறேன்' என்று அம்மா அடம் பிடித்தும் அனுப்பி வைக்காத அவனை மனைவி திட்டித் தீர்த்தாள். என்ன சொல்ல? அவள் உலகம் வேறு. ஒரு வழியாக அம்மா பயணப்பட்டு விட்டாள்.

**இ**ன்னும் ரயில் வரவில்லை. அம்மாவை பெஞ்ச்சில் உட்கார வைத்தான்.

"நீயும் உக்காரேன்" என்றாள் கரிசனத்தோடு. உட்கார்ந்த பிறகு ஏதாவது ஆரம்பிப்பாள் எனத் தெரியும். அது அவன் மனைவி பற்றியதாக இருக்கும். கல்யாணத்துக்குப் பிறகு பேச்சே அப்படியாகத்தான் ஆகிவிட்டது.

பக்கத்தில் உட்கார்ந்ததும் அம்மாவுக்குக் கண் கலங்கியது. குரல் அடைத்தது. "அம்மாவாலே ஒண்டியா போக முடியாது. நானும் ஊருக்குக் கூடப் போய் விட்டுட்டு வர்றேன்னு சொல்லத் தோணலையா உனக்கு...? பாவி... இப்படி

இரா. சோமசுந்தரம்


“நம்ம ஜனம், நம்ம
உறவு எதுவுமே
அவளுக்குப் பிடிக்கலை...
தொலையறா...தேடிப் பிடிச்சு
கட்டி வைச்சது நானு... நீ
மனசைப் போட்டு
உழப்பிக்காதே...”

சரணாகதி ஆயிட்டியே... இப்படியொரு சனியன் வரும்னு கண்டேனா...?" அவள் புலம்பல் பயணிகளைக் கவர்ந்தது. தலை கவிழ்ந்தான்.

புலம்பல் வேறு திசைகளைக் காணும் முன்பாக ரயில் வந்தது. பயணிகள் பரபரத்தனர். இப்போது அம்மாவுக்கு என்ன நேர்ந்தாலும் யாரும் திரும்ப மாட்டார்கள். அமர்ந்திருந்த பெஞ்சுக்கு நேராக எஸ்-6 ரயில் பெட்டி வந்து நின்றது. ஏற்றி, இருக்கையில் அமர்த்தினான். டிக்கெட்டைக் கொடுத்து, பணத்தைத் திணித்தான். "குழந்தைக்கு வைச்சுக்கடா" என்றாள். பக்கத்தில் மிக லட்சணமான பெண் ஒருத்தி இருந்தாள். 'காட்பாடியிலே இறங்க வேண்டும். இவங்களுக்கு உங்களால் உதவ முடியுமா?' என்று அப் பெண்ணிடம் ஆங்கிலத்தில் கேட்டான். அவள் 'சரி' எனச் சிரித்தாள்.

மிகச் சாதாரண குடும்பத்திலிருந்து மிகவும் கஷ்டப்பட்டு படிக்க வைத்த மகன் வீணாகிவிடவில்லை என்ற பெருமிதம் அம்மாவின் முகத்தில்! அவன் பேச்சை ரசித்தாள்.

"எதையும் மனசுலே வைச்சுக்காதே" என்று தணிவாகச் சொன்னாள்.

பதில் சொல்லாமல் வெளியில் வந்து ஜன்னலோரம் நின்றான். அம்மா ஜன்னல் அருகே நகர்ந்து வந்து சொன்னாள்:

"நம்ம ஜனம், நம்ம உறவு எதுவுமே அவளுக்குப் பிடிக்கலை... தொலையறா...தேடிப் பிடிச்சு, கட்டி வைச்சது நானு... நீ மனசைப் போட்டு உழப்பிக்காதே... குழந்தையைப் பாத்துக்க. நேரத்துல வீடு வந்து சேரு. தினம் பத்து மணி ராத்திரிக்கு வந்தின்னா பச்சப் புள்ளையை வைச்சிக்கிட்டு ஒத்தையில என்ன பண்ணுவா?" கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

வயதானவள். வழியில் ஏதாவது என்றால்...! அலுவலக விசிட்டிங் கார்டை அம்மாவிடம் கொடுத்தான்.

ரயில் கிளம்பியது, பக்கத்திலிருந்த அந்தப் பெண் விசிட்டிங் கார்டைப் படிக்க முயன்றாள். "பெரிய வேலையிலே இருக்கான். ஆபீஸ்ல லீவு குடுக்க மாட்டேன்றாங்க. என்னைத் தனியா அனுப்பவும் பயப்படுறான்'' என்று அம்மா அவளிடம் சொல்வதை நகரும் ரயிலின் வேகத்திலும் கேட்க முடிந்தது. ○

---

## பாரு... பாரு... நல்லா பாரு...!

திருச்சி மலைக்கோட்டையின் வசந்த மண்டபத்தில் புதிதாகப் பொருத்தப்பட்டிருக்கும் டெலஸ்கோப் வழியாக தென்கிழக்குப் பகுதியான, பொன்மலை, ரயில்வே ஒர்க்ஷாப், ஏர்போர்ட், இரட்டை மலை என பார்த்து ரசித்துக் கொண்டிருக்கிறார் இந்தப் பெண்!



இந்த டெலஸ்கோப்பை, வசந்த மண்டபத்திலிருந்து உச்சிப் பிள்ளையார் கோயிலுக்குச் செல்லும் மலைப்பகுதியில் அமைத்தால், சுற்றுலாப் பயணிகளைக் கவரும் முக்கொம்பு, கல்லணையையும் கண்டு களிக்கலாமே!

- ஸ்ரீதி

# "தாய்மண்ணே, வணக்கம்!"



**கொ**ச்சிக்கு அருகில், திருப்பணத்தூர் கிராமத்தைச் சேர்ந்த ராணுவ வீரர் ஒருவர், கார்கில் போரில் வீர மரணம் அடைந்துவிட, அவரது உடல், இறுதிமரியாதை செலுத்துவதற்காக வைக்கப்பட்டிருந்தது.

கணவரின் உடலைக் கண்டது முதல், ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விடாமல், துக்கத்தைத் தனக்குள்ளே அடக்கி வைத்திருந்த இறந்த வீரரின் மனைவி, இறுதி ஊர்வலத்துக்காக, ராணுவ மரியாதையுடன் உடலைத் தூக்கிய போது, 'பாரத் மாதாகி ஜெய்!' என்று உணர்ச்சி பொங்க குரல் எழுப்பி, அந்தக் கணமே மனம் உடைந்து, குலுங்கி அழுதபோது, கூடியிருந்த அனைவரும் மெய் சிலிர்த்துப் போனார்கள்.



**கா**ர்கிலில் வீர மரணமடைந்த இன்னொரு வீரரின் மனைவியான நேஷ்மி கௌதம், விதவையானபோது, அவருக்குத் திருமணமாகி பதினைந்து மாதங்களே ஆகியிருந்தன. ஆனால் அவர் மனம் தளரவில்லை. ராணுவத்தில் சேர விண்ணப்பித்தார். ராணுவப் பயிற்சி பெற்றார். இப்போது அவர் இந்திய ராணுவத்தில் அதிகாரி.

''இந்த இரண்டு சம்பவங்களும்தான் என்னை 'சல்யூட்' படம் எடுக்கத் தூண்டின'' என்று கூறுகிறார் சென்னையைச் சேர்ந்த திரைப்படத் தயாரிப்பாளரான சிவபிரசாத்.

பெரிய ஸ்டார்கள் யாரும் கிடையாது. ஒன்றரை மணி நேரப் படம். பதினைந்து லட்சம் ரூபாய் பட்ஜெட்.

''கார்கில் சம்பந்தமாக நான் இன்னொரு செய்தியையும் பேப்பரில் படித்தேன். வீர மரணமடைந்த கார்கில் வீரருக்கு வழங்கப்பட்ட பென்ஷன், இதர பணத்தை அடையும் நோக்கத்துடன் அவரது மனைவியைக் கொன்றுவிட்டார்களாம். கொலையாளிகள் யார் தெரியுமா? இறந்த வீரரின் பெற்றோர்தான்! அந்தச் செய்தி என்னை மிகவும் உறுத்தியது. எனவே, படத்தில் மாமியார் - மருமகளுக்கு இடையே மிகவும் அன்பான, ஆழமான உறவை அமைத்திருக்கிறேன்.

''தவிர, வீரமரணமடைந்த ராணுவத்தினரின் மனைவிமார்கள், ராணுவத்தில் சேருவதற்கு 'வீர் நாரி' (வீரப் பெண்மணி) என்கிற சிறப்புத் திட்டம் அமலில் உள்ளது. இதன்படி, வயது வரம்பு, திருமணமாகாதவராக இருக்க வேண்டும் என்பது போன்று, பெண்கள் ராணுவத்தில் சேருவதற்கான சில தகுதிகள் தளர்த்தப்பட்டிருக்கின்றன. இது குறித்த விழிப்புணர்வையும் ஏற்படுத்தும்படி கதையை அமைத்திருக்கிறேன்'' என்கிறார்.

இந்தப் படத்தை மலையாளத்தில் எடுத்தாலும், இப்போது இந்தியிலும் மொழி மாற்றம் செய்யப்பட்டுள்ளது.

இந்திய ராணுவத்தின் தளபதி ஜெனரல் பத்மநாபன் படத்தைப் பெரிதும் பாராட்டியதோடு, எந்த வகையிலேனும் உதவும்படி தகவல் ஒலி பரப்பு அமைச்சகத்துக்குச் சிபாரிசு கடிதமும் கூட எழுதியிருக்கிறாராம்.

''இந்தப் படத்தை தமிழிலும் மொழி மாற்றம் செய்ய விரும்புகிறேன். அதற்காக தமிழக அரசின் உதவியை நாடி இருக்கிறேன்'' என்கிறார் சிவபிரசாத் நம்பிக்கையோடு.

சந்திப்பு: **சந்திரமௌலி**

மனசார
வாழ்த்துங்களேன்!



கல்கி வார இதழின்
வைரவிழாவும், கல்கி சதாசிவம்
நூற்றாண்டு விழாவும்
இணைந்து ஒரு முழுநாள்
விழாவாக மிகச் சிறப்பான
முறையில் நடைபெறவிருக்கிறது.
கல்கி வாசகர்கள் இந்த விழாவில்
கலந்து கொண்டு சிறப்பிக்க
வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறோம்.

# கல்கி-60

தலைமை :

மேதகு தமிழக ஆளுனர்

## திரு பெ.ஸ்ரீ. ராமமோகன் ராவ்

தமிழக உயர்நீதிமன்ற நீதிபதி மாண்பமை பிரபா ஸ்ரீதேவன்,
டாக்டர் சுதா சேஷய்யன், திருவாளர்கள் ப. சிதம்பரம்,
ஏவி.எம்.சரவணன், 'சோ' ராமசுவாமி, கவியரசு வைரமுத்து,
ஃப்ரண்ட்லைன் ஆசிரியர் என். ராம் மற்றும்
சிலர் பங்கேற்கின்றனர்.

நித்யஸ்ரீ மகாதேவன்
இன்னிசைக் கச்சேரி நிகழ்த்துகிறார்.

நாள் : ஆகஸ்ட் 4, 2002 ஞாயிற்றுக் கிழமை,
இடம் : காமராஜர் அரங்கம், தேனாம்பேட்டை,
சென்னை - 18.

அனைவரும் வருக!
தங்கள் வருகை எங்களின் பெருமகை!

**நிகழ்ச்சி நிரல் அடுத்த இதழில்...**


* லாரிகள் ஜாக்கிரதை!


* ஒன்று...


* ...ஒன்றுமில்லை!


* மானசீக தப்பு!

# தியாகத்தில்

● **கே.வி. ராமன்,**
**சென்னை - 73**

*? நெல்லையில் வ.உ.சிக்கு மணி மண்டபமும் சிலையும் நிறுவ தமிழக அரசு முடிவு செய்துள்ளதே?*

! வாஸ்து சாஸ்திரம் பார்த்து வைக்கச் சொல்லுங்க, லாரி வந்து இடிச்சுடப் போவுது!

● **எம்.ராஜேந்திரன்,**
**லால்குடி.**

*? மத்திய அரசு தமிழகத்தை மாற்றாந்தாய் மனப்பான்மையுடன் நடத்துகிறது என்று நிதியமைச்சர் பொன்னையன் கூறியுள்ளாரே...?*

! நம்ம நாட்டிலே முன்னேறக்கூடாதுங்க! முன்னேறிய மாநிலம்னா ஒதுக்கீடை குறைச்சுடுவாங்க. அதான் டிரபிள்!

● **சி.எம். குமார், மதுரை.**

*? அரசு போக்குவரத்துத் துறையைத் தனியார் மயமாக்க முடிவு செய்த பிறகு தமிழக அரசு நிறைய புது பஸ்கள் வாங்கியிருப்பது ஏன்..?*

! அடுத்த மாசமோ, அடுத்த ஆண்டோ ஒரு கல்யாண விருந்து காத்திருக்குன்றதுக்காக இன்னிக்குச் சாப்பிடாம பட்டினி கிடக்க முடியுமா சுவாமி!

● **மல்லிகை மன்னன், மதுரை - 17.**

*? 'வேட்பாளர்கள் தங்கள் சொத்துக் கணக்கைக் காட்ட வேண்டும் என சுப்ரீம் கோர்ட் சொன்னதை நிச்சயம் ஏற்க முடியாது' என்று அரசியல் கட்சித் தலைவர்கள் சொல்லி விட்டார்களே தலைவா...?*

! அதனினும் மோசம் – இரண்டு முறை கிரிமினல் வழக்கு பதிவு செய்யப் பெற்றோர் தேர்தலில் நிற்க முடியாது என்ற சட்டத்தை அறிமுகப்படுத்தியிருப்பது! அது என்ன, இருமுறை கணக்கு?.... ஒரு முறை பாதகம் செய்த அரசியல்வாதிகள் புனிதர்களா...?

● **கே. தெய்வசிகாமணி,**
**சென்னை - 30.**

*? 176 சதுர அடி அறையில், மின் விசிறிகூட தரப்படாமல் வைகோவை வேலூர் சிறையில் அடைத்து வைத்தது பற்றி..?*

! மற்ற கைதிகளுக்குத் தரப்படாத தனிச் சலுகை எனக்கு மட்டும் வேண்டாம் என்று கூறி வைகோ மேலும் இரண்டு பிளஸ் பாயின்ட் பெற வாய்ப்பு தரப்பட்டது.

● **பூஜா, வேலூர்-1.**

*? இந்திய அணியின் நாட்வெஸ்ட் கோப்பை சாம்பியன் சாதனை குறித்து...*

! இறுதிப் பந்தயத்தின் பரபரப்பு நீண்ட நாட்களுக்குத் தாங்கும். நிச்சயம் தோல்வி என்று முடிவு செய்து, டி.வி. பார்க்காமல் தூங்கச் சென்று ஏமாந்தவர்களைப் பார்த்துப் பரிதாபப் படுகிறேன்.

● **எஸ்.கோவிந்தராஜன், கோவை - 9.**

*? சிறுகதை இலக்கியத்தை சிசுக்கொலை போல் சிதைத்துச் சீரழித்து வருகிறார்களே..?*

! காலத்துக்கேற்ப அளவிலும் வடிவத்திலும் மாற்றத்துக்குட்பட்ட போதிலும்

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

மைக்கேல் சாமுவேல்
ராம்சன்ஸ் கம்யூனிகேஷன்ஸ்
D - 9, ரூம் 1, எம்.எல். கேம்ப்,
மும்பை - 400 019.

பல ரத்தினங்கள் பிறந்து கொண்டுதானிருக்கின்றன. அடுத்த வாரம் கல்கியில் படியுங்கள் — வைரவிழா போட்டியில் முதல் பரிசு பெற்ற வைட்டமின் சிறு கதையை.

● பா. இராம் முருகன், சென்னை - 68.

? ஜெயலலிதா ஒருவர் உழைக்க, ஒரு கோடி பேர் வாழ்கிறோம் எங்கள் கட்சியில், என்கிறாரே கராத்தே தியாகராஜன் — இது பற்றி...?

! ஒருவர் மட்டுமே உழைக்க 99,99,999 சோம்பேறிகள் வாழும் கட்சி அ.இ.அ.தி.மு.க. என்று சுய விமர்சனம் செய்து கொள்கிறார்! நமக்கென்ன போச்சு!

● கே. ரமேஷ்பாபு, சேலம் - 1.

? விடுதலைப் புலிகளுக்கு வழக்கம் போல் மானசிக ஆதரவு அளிப்போம் என்று டாக்டர் ராமதாஸ் கூறியுள்ளாரே...?

! மானசிக ஆதரவை வெளிப்படையாகச் சொல்லலாமோ...? மானசிகமாய்க் கைது செய்வதோடு ஜெ திருப்தி அடைந்து விட மாட்டாரே...!


• தியாகிகளுள் தியாகி!


• சிறையிலும் ஆதாயம்!


• முதலில்...


• ...யார்?...

...பில்லை. 'விக்டிம்' மின் மதிப்பே உயர்கிறது.

● பாற்கடல் வேந்தன், தோட்டப்பாளையம்.

? தியாகத்திலேயே பெரிய தியாகம் எது..?

! துணைப் பிரதமரை நியமித்துக்கொள்வது!

● மைக்கேல் சாமுவேல், மும்பை - 19. ❒

? இன்னொரு தடவை ஓய்வு பெறுவதற்குள் தேவாரம் சந்தன வீரப்பனைப் பிடித்து விடுவாரா...?

! யார் ஓய்வு பெறுவதற்குள்..? தேவாரமா? வீரப்பனா?...

● கு. கணேசன், மறைமலைநகர்.

? வைகோ கைது விஷயத்தில் பி.ஜே.பி. இரட்டை வேடம் போடுவது போல் தெரிகிறதே...?

! ஆமாம். கைது விவகாரத்தை உன்னிப்பாகக் கவனித்து காலத்தை ஓட்டும் வில்லன் ஆட்சியில், கைது விவகாரத்தை எதிர்த்து ஆர்ப்பாட்டம் பண்ணும் ஹீரோ கட்சியில்.

# பெரிய தியாகம் எது?

● பி. குமார், சேலம் - 6.

? பொடாவை ஆதரிக்கிறோம்; ஆனால் பொடாவில் கைது செய்வதை எதிர்க்கிறோம் என்று சொல்கிறாரே எல். கணேசன்...?

! யாரை, எதற்கு பொடா கைது செய்கிறது என்பதே முக்கியம். பயங்கரவாதியை விட்டுவிட்டு, அரசியல்வாதி மேல் பாய்ந்தால் சட்டத்துக்கு மதிப்பில்லை; பிரயோகிப்பவருக்கும் மதிப்பில்லை. 'விக்டிம்' மின் மதிப்பே உயர்கிறது.

• ரூ. 50/- பரிசு பெறுபவர்:
சி.எம். குமார்,
35, பள்ளிக்கூட சந்து,
பாண்டிய வேளாளர் தெரு,
மதுரை - 625 001.

# "அன்பாலே கைது செய்!"

ஆதாம், ஏவாள் – ஆதி தியரி

பெற்றோரையும், மற்றோர்களையும் பிரித்து சூழ்ச்சி செய்யும் சகலகலா வல்லிகள்...

நியாயமில்லாத காரியங்களைக் கூட அழுது புரண்டு சாதித்துக் கொள்ளும் நவீன நீலிகள்...

'கடு கடு... சிடு சிடு' முகத்தோடு வெறுப்புக்கும் சாடிஸ்ட் திலகங்கள்..

இருக்கிறார்கள் ஐயா! இருக்கிறார்கள்!

சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த் போலதான் இந்தக் கட்டுரையாளரின் நிலைமையும். "ஆரம்பிச்சாச்சு! எப்படி முடிக்கணும்னு தெரியலை. ஆண்டவன்கிட்டேயிருந்து குறிப்பு வர்றதுக்காக காத்திருக்கேன்"னு பாபா பாணியிலே அடக்கத்தோடு சொல்லிக்கலாம். வேறே வழி!

தீய பழக்க வழக்கங்களில் ஈடுபட்டு, மனைவி, மக்களைக் கண்ணீர்க் கடலில் தள்ளிவிடும் ஆண் குலத் திலகங்கள்...

வரதட்சணை, நகை, நட்டு என மாமனாரை உறிஞ்சி வாழும் ஒட்டுண்ணிகள்...

வேலை வெட்டிக்குப் போகாமல் மனைவி மக்களின் சம்பாத்தியத்தில் உடல் வளர்க்கும் எம கிங்கரர்கள்..

சின்ன வீடு, ஸ்டெப்னி என செட்டப் செய்து குடும்ப நிம்மதியைக் கூறுபோடும் மன்மதக் கொழுந்துகள்...

மனைவியின் நடத்தையில் சந்தேகப்பட்டு, கொடுமை செய்யும் சைக்கோ சாம்ராட்கள்...

இருக்கிறார்கள் அம்மணி, இருக்கிறார்கள்!

அப்புறம், ஒன் சைடாவே பேச முடியுமா?

"பணம்.. பணம்"னு பேயாய் அலைந்து நல்ல மனுஷனை நார்நாராகக் கிழிக்கும் பேராசைப் பெட்டகங்கள்...

பர்ண சாலையோடு சீதையை மட்டும் பெயர்த்துக் கொண்டு போன ராவணன் போல, கணவனை மட்டும் தன்னோடு தூக்கிக் கொண்டு, அவனை வளர்த்த

நம்முடைய கவலையெல்லாம் இந்த அப்நார்மல் கேஸ்களைப் பற்றியது அல்ல! இவர்களுடைய அதீத போக்கு ஏன், எதனால் என்பதெல்லாம் சிக்மண்ட் ஃப்ராய்டு துணை கொண்டு அறிய வேண்டிய விஷயம்; இன்னொரு சீரியலுக்குத் தாங்கும்!

ஆதாம் – ஏவாள் ஆதி தியரியின் அக்கறை எல்லாம் மிதவாதிகளைப் பற்றியே! இந்தத் தியரிக்குள் அடங்குபவர்கள் எல்லாம் அப்பாவி கணவன் – மனைவிகள்! குணக்கேடு இல்லாதவர்கள். அன்பான, நிறைவான வாழ்க்கைக்காக ஏங்குபவர்கள். சுபாவத்தில் சிக்கல் இல்லாதவர்கள். ஆனால் சரியான அணுகுமுறை இல்லாததால், அன்பிருந்தும் வெளிப்படுத்த தெரியாதவர்கள். அவலை நினைத்து உரலை இடிப்பவர்கள். பரஸ்பர தேவைகளை வெளிப்படுத்தத் தெரியாதவர்கள். பிரச்னைகளை, பார்ட்னரின் கோணத்திலிருந்து பார்க்கத் தெரியாதவர்கள் மனக்கதவுகளைத் திறந்து வைப்பதாக நினைத்துக் கொண்டு, மேலும் இரண்டு திண்டுக்கல் பூட்டு போட்டு வைப்பவர்கள். காதலிக்கவும், காதலிக்கத் தூண்டவும் செய்யும் சூட்சுமம் அறியாதவர்கள்.

இத்தகைய மிதவாதிகள், நிராசையாலும், வெறுப்பாலும் கசப்புற்று, வாழ்க்கையைச் சோகமயமாக்கிக் கொண்டுவிடக் கூடாது என்பதே கூட்டுப் பிரார்த்தனை :

சரி, விஷயத்துக்கு வருவோம். நிம்மதியான திருமண வாழ்க்கைக்கு, திருமண ஆலோசகர்கள் தரும் யோசனைகளில் ஒரு சில...

- எதிர்பார்ப்பு பெரிதாக இல்லாவிட்டால், ஏமாற்றமும் பெரிதாக இருக்காது.




மாத நாவல்களிலும், மெகா சீரியல்களிலும் வரும் ஆதர்ஸ ஹீரோ / ஹீரோயின்களை, மனத்தில் கற்பனை செய்து கொண்டு, அது போன்ற உறவுக்கு ஏங்காதீர்கள்... அதெல்லாம் நிஜவாழ்வில் சாத்தியமேயில்லை!

• குறையே இல்லாத ஆணும், பெண்ணும் இனி பிறந்தால்தான் உண்டு. உங்கள் பார்ட்னருக்கு, தீர்க்க முடியாத குறைகள் இருந்தால், அவர்களை அக்குறைகளுடனேயே ஏற்றுக் கொள்ளுங்கள். நாளடைவில், அந்த பலவீனங்களை ரசிக்கும் மனநிலை ஏற்பட்டுவிடும்.

• கட்சி என்று ஒன்றிருந்தால் கோஷ்டிகள் இருக்கத்தானே செய்யும்? தாம்பத்தியம் என்றால் பிரச்னைகளும் கண்டிப்பாக வரும். அப்படி வரும்போது, எதிராளியை மட்டுமே பொறுப்பாக்குவதில் அர்த்தமில்லை. யதார்த்தமாகச் சமாளியுங்க.

• நாம் நமது சிறு வயது முதற்கொண்டே, பெற்றவர்கள், கல்வி, சமூகம், நட்பு வட்டம் போன்றவற்றால் ஒரு விதமாகப் புரோகிராம் செய்யப்படுவது போலவே, நம்முடைய பார்ட்னரும் வேறுவிதமான மோல்டிங்கில் உருவானவராக இருப்பார். ஆகவே, தாலிகட்டிய ஒரே தோஷத்துக்காக உடனே ஒத்த கருத்து ஒத்த செயல்பாடு உடையவர்களாக மந்திரம் போட்டதுபோல மாறிவிட வேண்டும் என்று எதிர்பார்ப்பது அபத்தம்.

• எனக்குப் போயும் போயும் இப்படி ஒரு துணை வாய்த்ததே என்ற விஷ சிந்தனை முளைத்தால் வேரோடு பிடுங்கி எறியுங்கள். நம் தேர்வுக்கு நாமே பொறுப்பு. மேலும், பார்டனர் நமக்குப் பொருத்தமில்லை என்று நினைப்போமானால் அவருக்கு நாம் பொருத்தமில்லை என்பதும் தர்க்கரீதியான உண்மை. ஆகவே அவரது அவஸ்தையும் நம்முடையது போன்றதே! ஆகவே, 'வாயில் வெள்ளி ஸ்பூனுடன் பிறந்தோம்' என்ற உயர்வு மனப்பான்மையை விட்டொழித்தல் மிக அவசியம்.

• கடைசியாக, கண்ணதாசன் டெக்னிக்!

**அனுராதா சேகர்**

"நமக்கும் கீழே உள்ளவர் கோடி. நினைத்துப் பார்த்து நிம்மதி நாடு" நன்றி- கவியரசரே!

**ஊ**ர் வம்பு கதைகளைக் கேட்டே பழக்கப்பட்டுவிட்ட வாசகர்களுக்காக, இளமை ததும்பும் கதை ஒன்றைச் சொல்லி 'முற்றும்' கார்டு போட அனுமதி கிடைத்துள்ளது. 'உம்' கொட்ட விரும்புகின்றவர்கள் மட்டும் அடுத்த பாராவுக்கு வாங்க!

**க**ணேசன் மாமாவுக்கு வயது எண்பது. "ஐயாம் எய்ட்டி இயர்ஸ் யங்" என்பார். மீனாட்சி மாமிக்கு எழுபது! கண் விழித்து கிரிக்கெட் மேட்ச் பார்க்கும் மாடர்ன் பாட்டி.

"மீனாட்சி" என்று கணேசன் குரல் கொடுத்தால், புடைவை தடுக்கிவிட, 'தஸ்...புஸ்..' என்று மூச்சிறைத்துக் கொண்டு வந்து நிற்பார் மாமி.

"சுகர் மாத்திரை சாப்பிட்டியா?" இதற்குத்தான் இந்தக் கூச்சல்.

"பாட்டி... உனக்கு என்ன ப்ளஸ் டூ படிக்கிற பொண்ணுன்னு நினைப்பா...? இப்படி ஓடி வர்றியே?" என்று பேரன் கடுகடுப்பான்.

"ஐம்பத்தைஞ்சு வருஷ பழக்கம். விட முடியலை" என்பாள் பாட்டி நாணத்தோடு.

**அ**ரவிந்த்சாமி சாயலில் ஹான்ட்ஸமாக இருக்கும் தாத்தா, கரகர குரலில் பேசும், மாநிறமான மீனாட்சி பாட்டியை ஒரு நிமிஷம் கூட விட்டுப் பிரியாமலிருப்பது பேத்திகளுக்கே ஆச்சரியம்தான்.

"தாத்தாவுக்கு எந்தக் கெட்ட பழக்கமும் இல்லியா பாட்டி?"

"ஏன் இல்லாம! காலத்துக்கு ஏத்த மாதிரி அதது நிறையவே இருந்தது. அப்புறம் ஒவ்வொண்ணா விட்டுட்டாரு."

"உனக்கு வருத்தமா இருக்காதா?"

"இருக்கும். ஆனா நான் காண்பிச்சுக்க மாட்டேன்."

"ஏன்?"

"காமிச்சா, அவருக்கு மனசு கஷ்டப்படும். அது பார்க்க எனக்கு இன்னும் மனசு தாங்காது."

"குட் ஓல்டு பாட்டி..."

"இப்ப நீங்க எல்லாம் சொல்ற மாதிரி, வெடிங்டே, பர்த்டே, வாலன்டைன்ஸ் டேவா கொண்டாடினோம். இல்லை... கிரீட்டிங்ஸ் கார்டு, ரோஜாப்பூனு பரிசு கொடுத்துக்கிட்டோமா? அதெல்லாம் கொடுத்தாதான் அன்பா? அவருக்கு எதுனா ஒண்ணுன்னா, எனக்குத் தாங்காது. எனக்கு எதுனா அசௌகரியம்னா, அவரு துடிச்சுப் போயிருவாரு..."

"பாட்டி... காலம் மாறிடுச்சு... இப்போ, எல்லாமே வெஸ்டர்ன் பாணிதான்."

"கல்யாணத்துக்கு எல்லாம் வெஸ்டர்ன் பாணி ஒத்து வராதுடா."

"இப்போல்லாம் வெஸ்ட்லயே நம்ம குடும்ப அமைப்போட பலத்தையும் அழகையும் பார்த்து ரூட் மாறி வந்துட்டிருக்காங்க..." என்கிறார் தாத்தா.

**ஆ**கவே, மிதவாத மித்திரர்களே, ஆண் - பெண் உறவு பலப்படுவதற்காகவும், பரஸ்பர புரிதலுக்காகவும் இந்தத் தொடரில் தரப்பட்ட சில விஞ்ஞானபூர்வமான மனோதத்துவ அணுகுமுறைகளை இதுகாறும் படித்து வந்தீர்கள். படித்தால் மட்டும் போதுமா? நடைமுறையில் நல்லபடியாகப் பிரயோகிக்கவும் செய்வீர்கள் என நம்புகிறோம். கைவிலங்குகளை, பூ விலங்காக்கும் வித்தை சாமான்யமில்லை. பரிசோதித்துப் பார்க்க, நிறைய சகிப்புத் தன்மையும், பொறுமையும் தேவை.

ரொம்ப சிக்கலாச்சுன்னா ஒரு நிமிஷம் நம்மைச் சுத்தி இருக்கற வெளி உலகத்தைப் பத்தி சிந்திச்சுப் பாருங்க... ஸெட் ரைட் பண்ண ஆயிரமாயிரம் விஷயம் காத்துகிட்டிருக்கு... இதுல மஞ்சள் ஸாரி வாங்கித் தரலைன்றதும் உப்புமால உப்பில்லேன்றதும் அல்பம் - மகா அல்பம்! அதையெல்லாம் உதறிட்டு கொஞ்சம் விசாலமா பார்க்க - அதுவும் இரண்டு பேரும் சேர்த்து பார்க்க பழகிட்டா அனுராதா சேகர் மாதிரி ஆட்களுக்கு வேலையில்லை, இல்லை இல்லவேயில்லை!

---

**"இது அப்துல்கலாம் படிச்ச பள்ளிக்கூடம்!"**

**"இருக்கட்டுமே, அதுக்காக குழந்தைகளுக்கு ஒன்... டூ... த்ரீ... ன்னு சொல்லிக் கொடுக்காம, 5, 4, 3, 2, 1ன்னு தலைகீழா சொல்லிக் குடுக்கணுமா என்ன!"**

**- ஆர். பிரசன்னா**



# புக் பேங்க்




### அட, அப்படியா செய்தி! - ஆர்.எஸ்.ராவ்

ஜனவரி ஒன்றை புத்தாண்டு தினமாகக் கொண்டாடுகிறோம். எப்போதிருந்து இந்தப் பழக்கம் ஆரம்பமானது? இது போன்ற பல சுவையான தகவல்களைக் கொண்ட புத்தகம்.

**(ஜெய்ஷங்கர் பப்ளிகேஷன்ஸ், 38, நடேசன் தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.35)**



### பேரறிவாளர் பிரடரிக் ஏங்கெல்ஸ் - என். நன்மாறன் எம்.எல்.ஏ.

காரல் மார்க்ஸின் நெருங்கிய தோழனாய் இருந்து, கம்யூனிஸ்ட் அறிக்கை உருவாக்குவதில் பங்கு கொண்டவர் ஏங்கெல்ஸ். அவரது வாழ்க்கை வரலாற்றைத் தெளிவாக விளக்குகிறது இந்நூல்.

**(ரெட் ஸ்டார் பப்ளிகேஷன்ஸ், 322 பி, வி.பி. சிந்தன் தெரு, பெத்தானியாபுரம், மதுரை - 16. விலை ரூ.10)**



### பழந்தமிழ் இலக்கியம் ஓர் ஆய்வு - ஆ.பழநியப்பன்

பழந்தமிழிலக்கியம் குறித்த ஆய்வுகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. புதிய புதிய செய்திகள் அவை மூலம் கிடைப்பதும், அறிவைத் தூண்டும் விதமாகவும் ஆராய்ச்சிப் பரப்பை விரிவுபடுத்துவதாகவும் இருக்கின்றன. அந்த வகையில் இந்தப் புத்தகம் ஓர் ஆழ்ந்த ஆய்வை வெளிப்படுத்துகிறது. ஜீரோ - பூஜ்யம் - சைபர், சூன்யம் பற்றிய கட்டுரை சுவாரஸ்யமாக இருக்கிறது. வாசிக்க வேண்டிய நூல்.

**(என்.சி.பி.ஹெச். 41-பி, சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை- 98. விலை ரூ.68)**




### மாண்டூக்ய உபநிஷதம் - ஒன்றென்றிரு!

நூற்றியெட்டு உபநிஷதங்களுக்கும் சிகரமாகக் கருதப்படும் பன்னிரண்டு மந்திரங்களே கொண்ட மாண்டூக்ய உபநிஷதத்தை எளிய தமிழில் விளக்கித் தந்துள்ளார் ராமகிருஷ்ண மட துறவி ஆசுதோஷானந்தர்.

**(ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை - 4. விலை ரூ.15)**




### ஐ.ஏ.எஸ். தேர்வு விதிமுறைகள் மற்றும் வழிமுறைகள்

ஐ.ஏ.எஸ். தேர்வுக்கான வழிமுறைகள், தேர்வு கட்டணம் உள்ளிட்ட பல்வேறு அவசியமான தகவல்களைத் தருகிறது இப்புத்தகம். ஏ.எம். ஜவஹர் ஐ. சுசில்குமார் இணைந்து உருவாக்கியிருக்கிறார்.

**(அனுராதா ஏஜென்ஸீஸ், விடையல் கருப்பூர், கும்பகோணம். விலை ரூ.30)**



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கை யில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)
Arumbakkam, Chennai - 600 106
Tel. Off: 475 5700, 475 1356, 475 5799
Cell No. : 98400 84363
Email: svhome1rediffmail.com

---

ஜெயச்சந்திரன் டெக்ஸ்டைல்ஸ் வழங்கும்

# ஆடிக்கழிவு 10%-50%

உண்மையான தள்ளுபடி விற்பனை

GENUINE DISCOUNT SALE



உயர்தர மில்களில் இருந்து தரமான துணிகளை கொள்முதல் செய்து உண்மையான தள்ளுபடி விலையில் விற்பனை செய்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

- பட்டுச்சேலைகளுக்கு தனிப்பிரிவு
- ஷூ மற்றும் செருப்புகளுக்கு தனி தளம்

ஞாயிறு விற்பனை உண்டு

*ரெடிமேட் ஆடைகளின் சங்கமம்*

## ஜெயச்சந்திரன் டெக்ஸ்டைல்ஸ்

27, ரங்கநாதன் தெரு, (மாம்பலம் ரயில் நிலையம் அருகில்),
தி.நகர், சென்னை-17 ✆4339971, 4334660



# சிவகாமியின் சபதம்

நாற்பத்து ஏழாம் அத்தியாயம்

## மழையும் மின்னலும்

சிவகாமிக்குச் சுய உணர்வு வந்தபோது தான் பாறையில் சாய்ந்துகொண்டு தரையில் உட்கார்ந்திருப்பதையும், சக்கரவர்த்தி தனக்கு அருகில் உட்கார்ந்து ஆசுவாசப் படுத்துவதையும் கண்டான். பயபக்தியுடன் சட்டென்று எழுந்திருக்க அவள் முயன்றபோது மகேந்திரர் அவளுடைய கரத்தைப் பிடித்து உட்கார வைத்து, "வேண்டாம்!" என்று கூறினார்.

சற்று முன்னால் தன் காதில் விழுந்த விஷயம் உண்மைதானா அல்லது தன்னுடைய சித்தப் பிரமையா என்று கேட்பவள் போல் மகேந்திர பல்லவரைச் சிவகாமி, இரங்கி நோக்கினாள்.

சக்கரவர்த்தி, "குழந்தாய்! மாமல்லனிடம் உன்னுடைய அன்பு எத்தகையது என்பதைக் காட்டிவிட்டாய். அவனுக்கு உன்னால் அபாயம் நேர்ந்தது என்றதும் உன் உணர்வையே இழந்துவிட்டாய். இத்தகைய அன்பு நிறைந்த உன் இருதயத்தை நான் மேலும் புண்படுத்த வேண்டியவனாயிருக்கிறேன்" என்றார்.

"ஐயோ! இன்னும் என்ன?" என்று சிவகாமி விம்மினாள்.

"முக்கியமான விஷயத்தை இன்னும் உனக்கு நான் சொல்லவில்லை, சிவகாமி! உன்னிடம் ஒரு வாக்குறுதி நான் கேட்கப் போகிறேன்! மாமல்லனுடைய க்ஷேமத்துக்காகக் கேட்கப் போகிறேன். நீ மறுக்காமல் தர வேண்டும்" என்றார் மகேந்திரர்.

அமரர் கல்கி

சிவகாமியின் குழம்பிய உள்ளத்தின் அடிவாரத்தில் ஒரு சிறிது தெளிவு ஏற்படத் தொடங்கியது. சக்கரவர்த்தியின் பேரில் அவளுக்கு ஏற்கெனவே இருந்த சந்தேகங்கள் மீண்டும் தோன்றின. 'இவர் நம்மை ஏமாற்றி ஏதோ ஒரு சூழ்ச்சியில் அகப்படுத்தப் பார்க்கிறார்: ஜாக்கிரதையாகயிருக்க வேண்டும்!'' என்று எண்ணினாள்:

தன்னால் மாமல்லருக்கு அபாயம் நேர்ந்ததாகச் சற்றுமுன் சக்கரவர்த்தி கூறியதில் கூட அவநம்பிக்கை ஏற்பட்டது. தன்னை தனிமைப்படுத்தி வைத்துக் கொண்டு எதற்காக இப்படியெல்லாம் இவர் பேசுகிறார்? இவருடைய நோக்கங்கள் என்ன?

தலை குனிந்த வண்ணம், ''பல்லவேந்திரா! மன்னிக்க வேண்டும். தாங்கள் சொல்லுவது ஒன்றும் என் மனத்தில் பதியவில்லை. மாமல்லருக்கு என்னால் அபாயம் நேர்ந்தது என்று சொன்னீர்களே? அது எப்படி?'' என்று கேட்டாள்.

"குழந்தாய், உன் மனத்தை அதிகமாக வருத்தப்படுத்த வேண்டாம் என்று அதை நான் சொல்லவில்லை. நீயே கேட்கிறபடியால் சொல்கிறேன். காஞ்சியில் உன்னுடைய அரங்கேற்றம் நடந்து இரண்டு நாளைக்கெல்லாம் உங்கள் அரண்ய வீட்டுக்கு நான் வந்தேனல்லவா? அப்போது உன் தந்தையிடம் சில விஷயங்கள் சொன்னேன். நீயும் கேட்டுக் கொண்டிருந்தாய். உன்னுடைய கலை தெய்வீகக் கலையென்றும், அதைத் தெய்வத்துக்கே அர்ப்பணமாக்க வேண்டும் என்று சொன்னேன். உனக்கு நினைவு இருக்கிறதா?''

சிவகாமிக்கு நினைவு வந்தது. அதை இப்போது எதற்காகச் சொல்கிறார் என்று அவள் உள்ளம் சிந்தித்தது. முகத்தை நிமிர்த்தாமல் குனிந்தவண்ணம், "நினைவு வருகிறது, பிரபு!'' என்றாள்.

''குழந்தாய்! தெய்வத்துக்கு உரிமையாக்க வேண்டிய பொருளை மனிதர்களுக்கு உரிமையாக்க முயன்றால், அதனால் தீங்கு வராமல் என்ன செய்யும்? ஏதோ இந்த மட்டும் மாமல்லன் உயிர்த் தப்பிப் பிழைத்தது பல்லவ ராஜ்யம் செய்த பாக்கியந்தான்!''

அப்போது சிவகாமி சட்டென்று தலையை நிமிர்த்தி நீர் ததும்பிய கண்களினாற் சக்கரவர்த்தியை ஏறிட்டுப் பார்த்து, ''பல்லவேந்திரா! தாங்கள் ஏதோ கூடமாகப் பேசுகிறீர்கள். நான் கல்வி கேள்வியற்றவள்; ஏழைச் சிற்பியின் மகள். என்னைச் சோதிக்க வேண்டாம்!'' என்று விம்மினாள்.

மகேந்திரர் அப்போது சிவகாமியின் விரிந்த கூந்தலை அருமையுடன் தடவிக் கொடுத்து, அன்பு ததும்பும் குரலில் கூறினார்.

''அம்மா! சிவகாமி! உன்னை நான் சோதிக்கவில்லை. உன் தந்தை ஆயனருக்கும் எனக்கும் எப்பேர்ப்பட்ட சிநேகம் என்பது உனக்குத் தெரியாதா? அவருடைய மகளாகிய நீ எனக்கும் மகள்தான்! கனவிலும் உனக்குக் கெடுதல் எண்ண மாட்டேன். உன் தந்தை எப்படிச் சிற்பக் கலையில் ஈடும் இணையும் இல்லாத பெருமை வாய்ந்தவரோ, அதேபோல் நீயும் பரதக்கலையில் சிறந்து விளங்குகிறாய். உன்னுடைய கலைத் திறமை இன்னும் மகோந்நதத்தையடைந்து பரத கண்டமெங்கும் உன்னுடைய புகழ் விளங்க வேண்டும் என்பது என் மனோரதம். அதற்கு எதுவும் குறுக்கே நிற்கக் கூடாது; யாரும் தடையாயிருக்கக் கூடாது என்பது என் எண்ணம். அப்படி குறுக்கே தடையாக நிற்பவன் என்னுடைய சொந்த மகனாகவே இருந்த போதிலும், அந்தத் தடையை நான் நீக்க முயல்வேன்.''

சிவகாமி திடுக்கிட்டவளாய் முகத்தில் அவநம்பிக்கை தோன்ற மகேந்திர பல்லவரை ஏறிட்டுப் பார்த்தாள்.

'கொஞ்சம் பொறு, குழந்தாய்! முழுமையும் சொல்லி விடுகிறேன், பிறகு, உன் இஷ்டம் போல் தீர்மானம் செய்து கொள். சற்றுமுன் நான் ஏதோ கூட



“என்ன சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! நாகநந்தி எதற்காக மாமல்லரைக் கொல்லப் பார்த்தார்?”



மாய்ப் பேசுகிறேன் என்று கூறினாய். உண்மைதான். உன்னிடம் வெளிப்படையாய்ச் சொல்வதற்குச் சங்கோசப் பட்டுக் கொண்டுதான் அவ்விதம் கூறினேன். நீ அறிவாளியாகையால் தெரிந்து கொள்வாய் என்று நினைத்தேன். ஆனால், தற்சமயம் உன் மனம் பல காரணங்களினால் குழம்பிப் போய் இருக்கிறது. அதனால் நீ தெரிந்து கொள்ளவில்லை. எனவே, நான் சொல்ல விரும்பியதை உன்னுடைய நன்மைக்காகச் சொல்ல வேண்டியிருப்பதை - பச்சையாகவே சொல்லிவிடுகிறேன். அதனால் உன் மனத்திற்கு வருத்தம் நேர்ந்தால், என்னை மன்னித்து விடு!'' என்று கூறி மகேந்திர பல்லவர் ஒரு பெருமூச்சு விட்டார். அச்சமயம் அவருடைய முகக்குறி மிகவும் கடினமான காரியத்தைச் செய்வதற்கு ஆயத்தமாகிறவரைப் போலக் காணப்பட்டது.

சிவகாமி மறுபடியும் தலை குனிந்து தரையைப் பார்த்த வண்ணம் இருந்தாள். ஏதோ ஒரு பெரிய விபரீதத்தை எதிர்பார்த்து அவளுடைய இருதயம் விம்மிற்று; இடையிடையே இரண்டொரு சொட்டுக் கண்ணீர் பூமியில் விழுந்தது.

"சிவகாமி கேள்! உன் தந்தை கல்லைக் கொண்டு உயிர்ச்சிலைகளைச் சமைக்கிறார். அதுபோலவே பிரம்ம தேவன் மண்ணைக் கொண்டு பூலோகத்திலுள்ள சகல ஜீவராசிகளையும் படைக்கிறான். ஆனால், அசாதாரண அழகு படைத்த ஸ்த்ரீகளைப் பிரம்ம தேவன் சிருஷ்டிக்கும்போது தன்னுடைய நாலிரு கண்களிலிருந்தும் சொட்டும் கண்ணீரையும் மண்ணுடனே கலந்து சிருஷ்டிப்பதாகச் சொல்வதுண்டு. அப்படிப்பட்ட அசாதாரண சௌந்தரியவதிகளால் உலகத்திலே எத்தனையோ துன்பங்கள் உண்டாகுமென்று பிரம்மதேவனுக்குத் தெரிந்த படியினாலேதான் அப்படி அவன் கண்ணீர் விட்டுக் கொண்டே அவர்களைப் படைப்பானாம்! குழந்தாய் உன்னைப் படைக்கும்போது பிரம்ம தேவன் கண்ணீர் பெருக்கிக் கொண்டுதான் படைத்தானோ என்று நான் சில சமயம் எண்ணுவதுண்டு. அத்தகைய அற்புத சௌந்தரியம் உன் மேனியில் குடி கொண்டிருக்கிறது. அது போதாதென்று உலகிலேயே இணையற்ற சௌந்தரியக் கலையும் உன்னிடம் சேர்ந்திருக்கிறது. நீ குழந்தையாயிருந்த வரையில் இதெல்லாம் எனக்குத் தோன்றவில்லை. ஆயனரைப் போலவே நானும் உன்னை என் செல்வக் கண்மணியாக எண்ணி மடியில் வைத்துக் கொண்டும், தோளில் போட்டுக் கொண்டும் கொஞ்சிக் குலாவி மகிழ்ந்தேன். ஆனால், நீ யௌவனப் பிராயம் அடைந்தபிறகு, உன்னைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு, 'ஐயோ! இந்தப் பெண்ணால் உலகில் விபரீதம் எதுவும் ஏற்படாமல் இருக்க வேண்டுமே!' என்ற பச்சாதாபம் உண்டாகும். இரண்டு வருஷத்துக்கு முன்னால் விபரீதத்துக்கு அறிகுறிகள் தோன்றின. குழந்தைப் பிராயத்தில், உனக்கும் மாமல்லனுக்கும் ஏற்பட்டிருந்த குற்றமற்ற சினேகம் திடீரென்று காதலாக மாறியதைக் கண்டேன். இந்தத் தகாத காதலை எப்படித் தடுப்பது, உங்கள் இருவருடைய மனமும் புண்படாமல் எப்படி உங்களைப் பிரிப்பது என்று நான் யோசித்துக் கொண்டிருந்தபோதே, இந்த மகாயுத்தம் வந்தது. நான் அவசரமாகப் போர்க்களத்துக்குப் போக வேண்டியதாயிற்று. நான் இல்லாத சமயத்தில் நீயும் மாமல்லனும் சந்திக்கக்கூடாது என்பதற்காகவே அவன் காஞ்சிக் கோட்டைக்கு வெளியே வரக் கூடாதென்று கண்டிப்பான திட்டம் போட்டுவிட்டுப் போனேன்.

குனிந்து கொண்டிருந்த சிவகாமி தன்னையறியாத ஆத்திரத்துடன் மகேந்திர பல்லவரை ஏறிட்டுப் பார்த்தாள். கண்ணீர் ததும்பிய அவளுடைய கூரிய கண்களிலே தோன்றிய கோப ஜ்வாலை, 'சோ' வென்று மழை பெய்துகொண்டிருக்கும்போது இருண்ட வானத்தில் பளிச்சிடும் மின்னலைப் போல் ஜொலித்தது! அதனால் ஒருகணம் தயங்கிவிட்டுச் சக்கரவர்த்தி பின்னர் தொடர்ந்து கூறினார்: "சிவகாமி! உன்னையும் மாமல்லனையும் அவ்வாறு பிரித்து வைத்த போது, அதனால் உங்களுடைய நேயம் குன்றிவிடும் என்ற எண்ணம் எனக்கில்லை. காற்றினால் பெரு நெருப்புக் கொழுந்து விட்டுக் கிளம்புவதுபோல் கட்டாயப் பிரிவினால் உங்களுடைய காதல் இன்னும் ஜ்வாலையிட்டு வளரக் கூடும் என்பதை ஒருவாறு நான் எதிர்பார்த்தேன். எனவே, உங்களுடைய காதலைத் தடுக்கும் எண்ணத்துடன் உங்களை நான் பிரித்து வைக்கவில்லை. நான் இல்லாத சமயத்தில் மாமல்லனும் நீயும் சந்தித்தால் அதனால் வேறு பெரும் அபாயம் நேரும் என்று என்னுடைய உள்ளுணர்ச்சி சொல்லிற்று. புதையலைப் பூதம் காக்கிறதென்றும், ஜீவரத்தினத்தை நாக சர்ப்பம் காக்கிறது என்றும் சொல்வார்களே, - அதுபோல், கலைப் பொக்கிஷமாகிய உன்னைக் காப்பாற்றுவதற்கோ அல்லது கபளீகரம் செய்வதற்குத்தானோ, - ஏதோ ஒரு மாயசக்தி உன்னைத் தொடர்வதாக எனக்குத் தோன்றியது. அதனாலேயே மாமல்லன் உன்னை நெருங்க முடியாத படி நான் ஏற்பாடு செய்துவிட்டுப் போனேன். நான் எதிர்பார்த்தபடியே, உங்களைப் பிரித்து வைத்ததனால் உங்கள் காதல் குன்றாமல் கொழுந்து விட்டு வளர்ந்தது. இதை மாமல்லன் உனக்கு எழுதிய ஓலைகளினால் அறிந்தேன்!"

"என்ன?" என்று சிவகாமி அளவில்லாத வியப்புடனும் அருவருப்புடனும் சக்கரவர்த்தியை நோக்கினாள்.

"ஆமாம், சிவகாமி! மாமல்லன் உனக்கு எழுதிய ஓலைகள் - நீ மரப்பொந்தில் பத்திரப்படுத்தியிருந்த ஓலைகள் - என்னிடந்தான் வந்து சேர்ந்தன. அவ்வளவு நீசத்தனமான காரியத்தை நான் செய்ய வேண்டியிருந்தது. எல்லாம் இந்தப் பல்லவ இராஜ்யத்துக்காகத்தான். குழந்தாய்! சாதாரண மனிதர்களுக்குத் தர்மம் வேறு; அரச குலத்தினருக்குத் தர்மம் வேறு; உன் தந்தையைக் கேட்டால் இதைச் சொல்வார். மாமல்லன் ஒரு வியாபாரியின் மகனாகவோ அல்லது சிற்பியின் மகனாகவோ இருந்தால், அவனுக்கும் உனக்கும் நடுவில் நான் ஒருநாளும் நிற்கமாட்டேன். உங்களுடைய தெய்வீகமான காதலைக் கண்டு நான் களிக் கூத்தாடுவேன். ஆனால், இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் நன்மைக்காக உங்கள் இருவரையும் பிரித்து வைக்கும் கொடுமையான கடமை எனக்கு ஏற்பட்டது..."

சிவகாமி அப்போது எங்கிருந்தோ அசாத்தியமான தைரியம் பிறந்தது. முகபாவத்திலும், குரலிலும் நிகரில்லாத கர்வம் தோன்ற, "பிரபு! எங்களை நீங்கள் பிரித்து வைக்கப் பார்த்தீர்கள். ஆனால் அரசர்களைக் காட்டிலும் அதிக சக்தி வாய்ந்த விதி எங்கள் பக்கத்தில் இருந்தது. ஏரி உடைப்பையும் வெள்ளத்தையும் அனுப்பி எங்களை இந்தக் கிராமத்தில் சேர்த்து வைத்தது!" என்றாள்.

"ஆம், சிவகாமி! ஆனால், உங்களைச் சேர்த்து வைத்த அதே விதி நான் செய்திருந்த ஏற்பாடு எவ்வளவு அவசியமானது என்பதையும் எடுத்துக்காட்டியது. இந்த விஷக்கத்தியே அதற்கு அத்தாட்சி!" என்று மகேந்திர பல்லவர் கூறி, மீண்டும் அந்த விஷக்கத்தியை எடுத்துச் சிவகாமியின் கண் முன்னால் காட்டினார்.

### நாற்பத்து எட்டாம் அத்தியாயம்

# மகேந்திர பல்லவர் தோல்வி

சிவகாமி வெருண்ட கண்களுடன் அந்த நாகப் பிடி அமைந்த கத்தியைப் பார்த்தாள். குரல் நடுங்க, நாத் தழுதழுக்க விசித்திர சித்தரைப் பார்த்துக் கூறினாள்: "பல்லவேந்திரா! எந்தப் பாவியின் கரம் இந்த விஷக் கத்தியைப் பிடித்து மாமல்லருடைய முதுகில் செலுத்த யத்தனித்தது? கிருபை கூர்ந்து அதைச் சொல்லுங்கள். என்னால் இது நேர்ந்ததாயிருக்கும்பட்சத்தில்..." என்று மேலும் அவள் பேசுவதற்குள் சக்கரவர்த்தி குறுக்கிட்டார்! "ஆத்திரப்பட்டுச் சபதம் ஒன்றும் செய்ய வேண்டாம் சிவகாமி! இந்தப் பெரும் அபாயம் உன்னால் நேர்ந்தது தான். ஆனால், நீ அறியாமல் நேர்ந்தது. இந்தக் கத்தி யாருடையதாயிருக்கும் என்று உனக்கு ஒன்றும் தெரியவில்லையா?" என்று கேட்டார்.

"இம் மாதிரி கத்தியை நான் பார்த்ததேயில்லை, பிரபு!"

"பெயரிலேயே பாம்பையுடைய மனிதர் ஒருவரை உனக்குத் தெரியாதா, அம்மா?"

"நாகநந்தியடிகளா?" என்று சிவகாமி கேட்டபோது, அவளுடைய குரலில் வியப்பும் பயமும் ததும்பின.

"ஆம்! அவரேதான்!"

"ஐயோ! அவர் எதற்காக மாமல்லரைக் கொல்ல முயல வேண்டும்? நம்ப முடியவில்லையே?"

"ஏன் நம்ப முடியவில்லை! இதைவிட அதிசயமான பயங்கரத் துவேஷங்களைப் பற்றி நீ கேட்டதில்லையா?"

"நாகநந்தி எதற்காக மாமல்லரைத் துவேஷிக்கிறார்? ஐயோ! காவித் துணி தரித்த புத்த பிக்ஷுவா இவ்விதம்..."

"சிவகாமி! புத்த பிக்ஷுவாயிருந்தாலென்ன? யாராயிருந்தால் என்ன? ஸ்திரீ சௌந்தரியத்தினால் புத்த பிக்ஷுவின் மனம் கெட்டுப் போகாதா? விசுவாமித்திரருடைய கடுந்தவத்தையே மேனகையின் சௌந்தரியம் கலைத்துவிட்டதே! புத்த சங்கங்கள் சீர்கெட்டுப் போயிருக்கும் இந்த நாளில் இது என்ன அதிசயம்?"

"என்ன சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! நாகநந்தி எதற்காக மாமல்லரைக் கொல்லப் பார்த்தார்?"

"உன்னுடைய சௌந்தரியமாகிய விஷம் பிக்ஷுவின் தலைக்கேறியதனால் தான், அம்மா! வேறு என்ன இருக்க முடியும்? புத்த பிக்ஷுவின் கடின உள்ளத்தையும் உன் மேனி அழகு கவர்ந்தது; மாமல்லருடைய கோமள இருதயத்தையும் கவர்ந்தது. ஆனாலும், நீ உனது தூய உள்ளத்தை மாமல்லனுக்கே கொடுத்தாய். பிக்ஷுவின் துவேஷத்துக்கு அதுதான் காரணம். இந்தப் பாறையில் நீயும் மாமல்லனும் நேற்று இரவு பேசிக் கொண்டிருந்தபோது, இதே பாறைக்குப் பின்னால் புத்த பிக்ஷு கையில் இந்த விஷக் கத்தியுடன் ஒளிந்திருந்தார். கிராமத்துக்கருகில் உள்ள கோயில் வரையில் உங்களைப் பின் தொடர்ந்துவந்தார். கடவுளின் அருளும் குண்டோதரனுடைய சர்வ ஜாக்கிரதையும் சேர்ந்துதான் மாமல்லனுடைய உயிரைக் காப்பாற்றின..."

"குண்டோதரனா காப்பாற்றினான்? எப்படி, பிரபு?"

"உங்களுக்கும் பிக்ஷுவுக்கும் தெரியாமல் குண்டோதரன் உங்களைப் பின் தொடர்ந்து வந்தான். பிக்ஷு கோயில் மதில் மேல் ஏறிக் குதித்தபோது இந்தக் கத்தி தவறிக் கீழே விழுந்தது. அதை அவன் எடுத்துக்கொண்டான். பிக்ஷுவை நள்ளிரவில் கோயில் மடைப்பள்ளியில் விட்டுக் கதவைத் தாழிட்டுக் கொண்டு வந்து எங்களிடம் எல்லா விவரங்களையும் சொன்னான். நாங்கள் வந்து பார்ப்பதற்குள் பிக்ஷு மடைப்பள்ளியிலிருந்து மாயமாகி விட்டார்."

இவ்விதம் மகேந்திர பல்லவர் சொல்லிய போது சிவகாமியின் முகத்தில் அவ்வப்போது ஏற்பட்ட அதிசயமான மாறுதல்களையெல்லாம் அவர் கவனியாமல் இல்லை.

உண்மையில் நாக நந்தியைப் பற்றிப் பேச்சு வந்ததிலிருந்து, சிவகாமியின் பாதி மனம் இங்கேயும் பாதி மனம் மடத்திலேயும் இருந்தது. மடத்து உள்



அறையில் தூண் மறைவில் நாகநந்தி நின்ற தோற்றம் அவள் மனக்கண்முன் வந்து கொண்டேயிருந்தது.

இன்னும் அந்தப் பாதக பிக்ஷு அங்கேயே இருப்பாரா! இருந்தால், சக்கரவர்த்தியின் கையிலுள்ள கத்தியை வாங்கிக் கொண்டு போய் அவரைத் தன் கையாலேயே கொன்று விட வேண்டும் என்று சிவகாமிக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

"பல்லவேந்திரா! அப்பா எங்கே? நான் உடனே மடத்துக்குப் போக வேண்டும்!" என்றாள் சிவகாமி.

"தாயே! என் கோரிக்கையை இன்னும் நீ கேட்கவே இல்லையே? நான் கோரி வந்த வரத்தைக் கொடுக்கவில்லையே?"

"பிரபு! இப்படியெல்லாம் பேசி ஏன் என்னை வதைக்கிறீர்கள்! சிற்பியின் மகளுக்குக் கட்டளையிடுங்கள்!"

"கட்டளை இல்லை, அம்மா! உன்னிடம் வரந்தான் கோருகிறேன். அதுவும் எனக்காகக் கோரவில்லை. பல்லவ சாம்ராஜ்யத்திற்காகக் கோருகிறேன். இந்த சாம்ராஜ்யத்தைப் பெரும் விபத்திலிருந்து காப்பாற்றும் சக்தி இப்போது உன் கையில் இருக்கிறது."

"நான் என்ன செய்ய வேண்டும்?"

"மாமல்லனுக்கு ஓலை எழுதித் தர வேண்டும்!"

"என்ன ஓலை?" என்று சிவகாமி கேட்டாள்.

"மாமல்லனை நீ விடுதலை செய்வதாக எழுத வேண்டும். உன்னை மறந்து விடும்படி எழுத வேண்டும்."

"பிரபு! இந்த ஏழைப் பெண்ணை ஏன் இப்படிச் சோதனை செய்கிறீர்கள்? மாமல்லரையாவது நான் விடுதலை செய்யவாவது? என்னை மறக்கும்படி அவருக்கு நான் எப்படி எழுதுவேன்? நான் சம்மதித்தாலும் இந்தக் கை சம்மதியாது, சுவாமி!"

"சிவகாமி! காஞ்சிக்கு மூன்று காத தூரத்தில் வாதாபியின் படைகள் வந்திருக்கின்றன. ஆயினும் நான் இங்கே உன்னுடன் வாதாடிக்கொண்டிருக்கிறேன். இதிலிருந்தே என்னுடைய கோரிக்கை முக்கியமானதென்று உனக்குத் தெரியவில்லையா? உண்மையை இன்னும் பட்டவர்த்தனமாய்ச் சொல்கிறேன், கேள்! வாதாபியின் சமுத்திரம் போன்ற சைனியங்களை எதிர்த்து நிற்பதற்கு வேண்டிய படைபலம் இப்போது பல்லவ இராஜ்யத்துக்கு இல்லை. இந்த நிலைமையில் தெற்கேயிருந்து பாண்டியனுடைய பெரும் படையும் பல்லவ இராஜ்யத்தைத் தாக்க வருகிறது. நீ மனம் வைத்து என் கோரிக்கையை நிறைவேற்றினால், பாண்டிய சைனியம் பல்லவ சைனியத்துடன் சேர்ந்து விடும். இரண்டும் சேர்ந்தால் வாதாபிப் படைகளை வெற்றி கொள்ளலாம். சிவகாமி! பல்லவ இராஜ்யத்துக்கு இந்த மகத்தான உதவியை நீ செய்வாயா?"

"எனக்கும் பாண்டியர் படையெடுப்புக்கும் என்ன சம்பந்தம் பிரபு! பல்லவ இராஜ்யத்துக்கு இந்த ஏழைச் சிற்பியின் மகள் என்ன உதவியைச் செய்ய முடியும்?"

"உன் மனத்தைப் புண்படுத்த வேண்டாம் என்று பார்த்தால் நீ விட மாட்டேன் என்கிறாய். சிவகாமி! பாண்டிய இராஜகுமாரியை மாமல்லனுக்குக் கலியாணம் செய்து கொள்ளுமாறு தூது அனுப்பினார்கள். அதற்கு மாமல்லன் இணங்காதபடியால் பாண்டியனுடைய சைனியம் நம்மீது படையெடுத்து வருகிறது. கலியாணம் செய்து கொள்வதாகச் சம்மதம் தெரிவிக்க வேண்டியதுதான். உடனே பாண்டிய சைனியம் நம்முடன் சேர்ந்துவிடும். நீ மாமல்லனுக்கு விடுதலை கொடுத்தால், அவனை இதற்கு இணங்கச் செய்வேன். என்ன சொல்கிறாய், தாயே! பல்லவ இராஜ்யத்துக்கு உயிர்ப்பிச்சை அளிப்பாயா?" என்று மகேந்திரர் இரைஞ்சினார்.

சிவகாமி பூமியில் சட்டென்று உட்கார்ந்து, "மாட்டேன், மாட்டேன்! என்னால் முடியாது!" என்று அலறினாள். பின்னர், விம்மிக்கொண்டே, "பல்லவேந்திரா! உங்களுடைய கையிலுள்ள விஷக்கத்தியை என் மார்பில் பாய்ச்சிக் கொன்று விடுங்கள். தங்கள் குமாரருக்கு விடுதலை கிடைத்து விடும். பல்லவ இராஜ்யமும் காப்பாற்றப்படும்.



ஒரு பெரிய இராஜ்யத்தைக் காப்பதற்காக ஓர் அபலைப் பெண்ணைக் கொன்றால் என்ன? கத்தியை எடுங்கள் பிரபு! தங்களுக்கு தைரியம் இல்லாவிட்டால் கத்தியை இங்கே கொடுங்கள். நானே என் மார்பில் செலுத்திக் கொள்கிறேன்!" என்றாள்.

"சிவகாமி! நீ ஜயித்தாய்! நான் தோற்றேன்" என்றார் மகேந்திர பல்லவர சக்கரவர்த்தி.

பாறையடியில் மேலே கூறிய சம்பாஷணை நடந்து ஒரு நாழிகைக்குப் பிறகு சிவகாமியும் ஆயனரும் மண்டபப்பட்டுக் கிராமத்தை அடைந்தார்கள். மடத்து வாசலை அணுகியதும் சிவகாமி மிகவும் பரபரப்புடன் முதலில் பிரவேசித்து அறைக்குள்ளே சென்று பார்த்தாள். தூண் மறைவில் பிக்ஷுவைக் காணவில்லை. மடத்திற்குள் வேறு எங்கேயும் அவரைக் காணவில்லை.

ஏதோ ஒரு சந்தேகம் உதிக்கவே, அவசரமாகச் சென்று தனது ஆடை ஆபரணப் பெட்டியைத் திறந்து பார்த்தாள். கையினால் பலமுறை துழாவிப் பார்த்தாள். ஆடை ஆபரணங்களையெல்லாம் எடுத்து உதறிப் பார்த்தாள்.

எப்படிப் பார்த்தும் சக்கரவர்த்தி கொடுத்த சிங்க முத்திரையுள்ள இலச்சினையைக் காணவில்லை!

அதே சமயத்தில் வராக நதிக்கு அக்கரையில் ரதசாரதி கண்ணபிரானிடம் புத்த பிக்ஷு மேற்படி சிங்க இலச்சினையைக் காட்டிக் கொண்டிருந்தார். காட்டி, தன்னை அவனுடைய ரதத்தில் காஞ்சிமா நகருக்கு விரைவாக அழைத்துப் போகும்படி கட்டளையிட்டார். கண்ணபிரான் தயக்கத்துடன் அந்தக் கட்டளையை ஒப்புக்கொண்டு பிக்ஷுவை ரதத்தில் ஏறும்படி கூறினான்.

இதையெல்லாம் சற்றுத் தூரத்தில் மரங்களின் மறைவில் நின்று சக்கரவர்த்தியும் சத்ருக்னனும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். சத்ருக்னன் பாய்ந்து சென்று கண்ணபிரானைத் தடுப்பதற்கு யத்தனித்தபோது சக்கரவர்த்தி அவனுக்குச் சமிக்ஞை செய்து நிறுத்தினார்.

புத்த பிக்ஷு ரதத்தில் ஏறுவதையும், கண்ணபிரான் வேண்டா வெறுப்பாக ரதத்தின் குதிரைகளைத் தட்டி விடுவதையும், வீரர்கள் ரதத்தைப் பின்தொடர்ந்து செல்வதையும் அவ்விருவரும் பார்த்துக்கொண்டு சும்மா நின்றார்கள்.

சத்ருக்னனுடைய முகத்தில் கோபம் கொதித்தது. சக்கரவர்த்தியின் முகத்திலோ புன்னகை தவழ்ந்தது.

(தொடரும்)

## அருள்வாக்கு

நிறைவேறாத ஆசையின் இரண்டு உருவங்கள் தாம் துக்கமும் கோபமும். நம் ஆசையின் நிறைவேற்றத்துக்குத் தடையாக இருந்தவர்கள் நம்மைவிடக் கீழ்ப்பட்டவர்களாக இருந்தால் அவர்களிடம் கோபத்தைக் காட்டுகிறோம்; அவர்கள் நமக்கு மேலே இருந்துவிட்டால் கோபித்துக்குக் கொள்ள முடியாமல் நமக்குள்ளேயே துக்கப்பட்டுக் கொண்டு அழுகிறோம். கோபத்தின் கெட்ட சக்தி காமத்தின் சக்தியைவிடப் பெரியது. இதை நளசரித்திரமான 'நைஷதம்' வெகு அழகாகச் சொல்கிறது. கலி அரசன் வருகிறான். அவனது சேநாதிபதிகளாகக் காமனும் குரோதனும் வருகிறார்கள். கட்டியக்காரன் இவர்களுடைய பெருமைகளைப் பாடுகிறான். குரோதனைப் பற்றி அவன் என்ன பாடுகிறான்?



'காமன் புகாத இடமில்லையென்பார்கள். ஆனால் காமனும் புகாத ஒரு கோட்டை உண்டு. அந்தக் கோட்டைக்குள்ளும் இந்தக் குரோதன் குடி கொண்டிருக்கிறானாக்கும். அது எந்தக் கோட்டை தெரியுமா? துர்வாசருடைய இதயம்தான்' என்று குரோதனின் புகழைப் பாடுகிறான். காமமே அறியாத துர்வாச மகரிஷியும் கோபத்துக்கு ஆளானவர் என்று தாத்பரியம்.

நாம் இந்த மகாபாவியான குரோதனிடம் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கொஞ்சம் யோசித்துப் பார்த்தாலும் நமக்கே தெரியும்; யாரையும் கோபித்துக் கொண்டு சத்தம் போட நமக்குச் சிறிதும் யோக்கியதை இல்லை என்றும், யாரை நாம் கோபித்துக் கொள்கிறோமோ அவர்கள் செய்கிற தவறுகளை, அதைவிடப் பெரிய தவறுகளைக்கூட, செய்தவர் நாம் என்பதும் நம் அந்தராத்மாவுக்குத் தெரியும். அப்படியே நாம் தவறு செய்யாவிட்டாலும்கூட, அந்த மனிதன் அந்தச் சூழ்நிலையில் செய்த தவற்றை நாமும்கூட அந்தச் சூழ்நிலையில் இருந்தால் செய்திருக்கக் கூடும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

குரோதன் நம்முடைய பெரிய சத்ரு. அவனை அண்டவிடாமல் எப்போதும் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

# சினிமா விமர்சனம்

***சென்னை 'சுபம்' திரையரங்கில் பகல் காட்சி பார்த்துவிட்டு, ஜமாக வெளியே வந்த இரண்டு இளைஞர்கள், மூன்று யுவதிகளை மடக்கிப் பிடித்து, 'படம் எப்படி?' என்றதும் கலகலப்பாக களம் புகுந்து கலாய்த்து விட்டது அந்த இளமைக் கூட்டணி!***

**சுதர்ஷன் :** படத்தோட தலைப்பிலேயே இளமை ததும்பி வழியுது. படத்துக்கும் தலைப்புக்கும் ரொம்ப நெருக்கம்னுதான் சொல்லணும். ஏன்னா, நிறைய கேரக்டர்ஸ் மனசளவிலே எவ்வளவு அழகு!

**ஸ்ரீஜா :** தமிழுக்கு வேணா இந்தத் தலைப்பு புதுசா இருக்கலாம்! ஆனால் பாலிவுட்லே 'ஹம் ஆப் கே ஹைன் கௌன் மாதிரி நீளமான, இந்த மாதிரி 'விளிக்கிற' தலைப்புகள் நிறைய வந்துருச்சி.

**காயத்ரி :** எனக்கென்னவோ இந்தத் தலைப்பு பொண்ணுங்களுக்கு ரொம்ப பிடிக்கும்னு தோணுது.

**சந்துரு :** பசங்களுக்குத்தான் ரொம்பப் பிடிக்கும். இந்தப் படத்தோட தலைப்பை சாக்கா வைச்சுகிட்டே, விரும்புற பொண்ணுகிட்டே காதலைச் சொல்லிடலாமே.

**இராஜேஸ்வரி :** தலைப்பு புராணம் பாடியது போதும். படத்தோட கதையைப் பத்திப் பேசுங்க.

**சுதர்ஷன் :** உண்மையான காதல் நிச்சயமா ஜெயிக்கும். அப்படி ஜெயிக்கலேன்னாலும் அதை பாசிட்டிவா எடுத்துக்கணும்கிறதுதானே கதை?

**காயத்ரி :** இன்னும் சரியாச் சொல்லணும்னா காதல்லே தோத்துட்டா, மத்தவங்களை அழிக்கிறதோ, தன்னையே அழிச்சுக்கறதோ தப்போ தப்புன்னு சொல்றாங்க.

**சந்துரு :** இந்த மாதிரி ஒரு கனமான விஷயத்தை எவ்வளவு லைட்டாகச் சொல்லியிருக்கார் டைரக்டர். இதுக்கு ஹீரியாக வர்ற ஷாம் கேரக்டர் ரொம்ப



• ஸ்ரீஜா, சுதர்ஷன்



• சந்துரு, காயத்ரி, இராஜேஸ்வரி





# ஏய்! நீ ரொம்ப அழகா இருக்கே!

உதவியிருக்கு!

**காயத்ரி** : எக்ஸாக்ட்லி! ஷாம் கேரக்டர் மேலே நமக்கு எவ்ளோ மரியாதை வருது. மாமா பொண்ணுக்கு நம்ம மேலே காதல் இல்லைன்னு தெரிஞ்சதும் எத்தனை டீசென்டா நடந்துக்கிறார்.

**இராஜேஸ்வரி** : தன்னோட கேரக்டரை உணர்ந்து பண்ணியதோடு. கொஞ்சமும் ஓவர் ஆக்ஷன் இல்லாம இருக்கு. ஷாம் நடிப்பு.

**சுதர்ஷன்** : வசந்த் நல்லா வேலை வாங்கியிருக்கார்ன்னு கூடச் சொல்லலாம்.

**இராஜேஸ்வரி** : ஷாமுக்கு அடுத்து சினேகா ரொம்ப இயல்பு! ஆனால் இவங்களுக்குக் குரல் அவ்வளவு பொருத்தமாயில்லையே.

**சந்துரு** : படத்துலே ஹை ஸ்கோர் பண்ணினதுலே மூணாவது இடம் விவேக்குக்குதான். சல்மான்கானையே கிண்டலடிக்கும் விவேக்குக்கு ரொம்பதான் தில்லு!



**காயத்ரி** : ஏய்! ஜெயா ரேவை மறந்துட்டியே! ஜெயா ரே மாதிரி, அப்நார்மலா பிஹேவ் பண்ற பெண்களை, நிஜ வாழ்க்கையிலே நிறைய பார்க்கிறோம்?

**சுதர்ஷன்** : நிஜமாகவே அவங்க கண்கள் ரொம்ப அழகா இருக்கு. நடிப்பும்தான். ஆனால் ஜெயா ரே அறிமுகமாகிற தொடக்கக் காட்சியிலே, ஏதோ ஹாலிவுட் 'கமர்ஷியல் படத்துல வர்ற ஒரு 'ஹாட் பேப்' மாதிரி இல்லே இருந்தது.

**இராஜேஸ்வரி** : அப்புறம் இந்த பில்ட் அப் எல்லாம் அந்தக் கேரக்டருக்குப் பொருத்தமாத்தானே இருந்தது.

**ஸ்ரீஜா** : 'ஆஹா' ராஜீவ்

கிருஷ்ணாவை மறந்துட்டீங்களேப்பா. நாலைஞ்சு சீன்லே வந்தாலும் அந்த 'பாரத்' கேரக்டர் மனசுல நிக்குது. பரிதாபத்துக்குப் பதிலா, ஷாமுக்கு அவன்மேல வர்ற அதே கோபம் நமக்கும் வருதே!

**சந்துரு :** பாலகிருஷ்ணாவைத் தொடக்கத்துலே ஆண்டி ஹீரோ மாதிரி அறிமுகப் படுத்துறாரே. அப்போ பாதி படத்துக்கு அப்புறம் வில்லனா வரப் போறார் போல இருக்குன்னு நாம ஒரு கணக்கு போட்டா என்னோட கணக்கு வேறேன்னு, வேறொரு ரியலிஸ்டிக் டச் கொடுத்து நம்ம சராசரி ரசனையிலே மடார்ன்னு ஒரு அடி கொடுக்கிறார் இயக்குனர்.

**காயத்ரி :** இதுமாதிரி விஷயங்கள் வசந்தோட வித்தியாசமான திரைக்கதை அறிவு ரொம்ப கூர்மையா இருக்கிறதைக் காட்டுது.

**இராஜேஸ்வரி :** சீன்ஸ்லே மட்டும் என்ன... நிறைய காட்சிகள் ரொம்ப ப்ராக்டிகலா, பக்கத்து வீட்லே நடக்கிற மாதிரி இருக்குது. அதுலேயும், ராஜீவ் கிருஷ்ணாவை, அவனோட காதலி கல்யாணத்துக்கு அழைச்சிட்டுப் போறது, ரயில்லே அவன் தற்கொலை பண்ணிகிறதெல்லாம் மனசை ரொம்ப கனமாக்கிடுது.

**ஸ்ரீஜா :** கடைசிவரைக்கும் ராஜீவ் கிருஷ்ணா காதலியை, காட்டாமல் விட்டு விட்ட டெக்னிக் நல்ல கவிதை நயமானது. டயலாக்ஸ் ரொம்ப ரொம்ப ப்ராக்டிகல்.

---

**''நான் சுரேஷை காதலிக்கிறது என்னோட அப்பாவுக்குத் தெரிஞ்சு போச்சுடி.''**

**''அய்யய்யோ அப்புறம்...?''**

**'' 'பையன் ஏழையா பணக்காரனான்னு தெரிஞ்சுகிட்டு பணக்காரனா இருந்தா மட்டும் காதலி'ன்னு கண்டிஷனா சொல்லிட்டாரு.''**

**- வாசு**



**சுதர்ஷன் :** பின்னணி இசை அமைச்ச சபேஷ் முரளியை 'சபாஷ் முரளி'னு பாராட்டலாம்.

**ஸ்ரீஜா :** ட்யூன்ஸ் எல்லாம் புதுசாவும், இளமையாவும் இருக்கு. ஐந்து இசையமைப்பாளருமே தேறிட்டாங்க.

**காயத்ரி :** 'நீ இல்லாமல் நானில்லை' பாடலை படம் பிடிச்சிருக்கிற அந்தக் கடற்கரை அழகைப் பார்த்து 'ஏய்! நீ ரொம்ப அழகா இருக்கே'னு சொல்லத் தோணுது!

**இராஜேஸ்வரி :** 'ஒரு காதல் வந்திச்சோ' பாட்டுக்கு வித்தியாசமா ஒளி அமைப்பில் ஒவ்வொரு ஃபிரேமையும் மாடர்ன் ஆர்ட் மாதிரி செதுக்கியிருக்கிற கோபிநாத் சினிமாட்டோகிராபி சூப்பர்ப்பா!

**சந்துரு :** சிரியா பின்னணியில் வர்ற பாடலுக்கு இடையிலே, ஏன் இத்தனை வல்கரா பெல்லி டான்ஸ் பிட்டைப் போட்டாங்க. வசந்துகிட்டே இதை எதிர் பார்க்கவே இல்லே.

**கல்யாணி :** ஒரு வழியா க்ளைமாக்ஸ் பக்கம் வந்துட்டோம்.

**சந்துரு :** ஆமா. படம் முடிஞ்சதே தெரியாம எல்லோரும் சீட்டை விட்டு எழுந்திருக்காமல் உட்கார்ந்திட்டு இருந்தோம். அந்த அளவுக்கு அழுத்தமா படத்தை முடிச்சிட்டார் வசந்த்.

**காயத்ரி :** ஸோ, 'கேளடி கண்மணி'யிலே இருந்த அந்த கவிதைத் தனம் இதுலேயும் வந்துடுச்சு இல்லே.

**சந்துரு :** எஸ்.எஸ்! சரியாச் சொன்னே. அப்போ.. 'கல்கி' இந்தப் படத்துக்கு என்ன ரேட்டிங் தருவாங்கன்னு நினைக்கிறீங்க.

**சுதர்ஷன் :** இன்னக்கி காதலாலே மனசொடிஞ்சு போற இளைஞர்கள்தான் அதிகம். அவங்களுக்குப் புரியற மாதிரி பிரசாரமில்லாமல், ரொம்ப யூத்ஃபுல்லா மெசேஜ் சொல்லியிருக்கிறதுனாலே கண்டிப்பா அபவ் ஆவரேஜ் கொடுப்பாங்கன்னு தோணுது.

**சந்துரு, காயத்ரி, இராஜேஸ்வரி, ஸ்ரீஜா :** யூ ஆர் ரைட்!

**● அபவ் ஆவரெஜ்**

தொகுப்பு : **விஷ்வல்தாசன்**

படங்கள் : **சண்முகம்**

# 10

## பாலகுமாரன்

“அந்தம்மாவோட புருஷன் காளிகாம்பாள் கோயிலுக்குப் போய் என்னா தெரியுமா வேண்டினாரு?”

“என்ன வேண்டிகட்டார்?”

ரேவதி ஆவலாக அந்தப் பெண்ணைப் பார்த்துப் பேசினாள்.

“சங்கரய்யர் என்னைத் தொந்தரவு பண்றாரு. பதிலுக்கு நீ அவரைத் தொந்தரவு பண்ணுன்னு வேண்டினாராம். உள்ளுக்குள்ள இருந்த பூஜை ஐயரு வெளிய வந்து, நான்தான் சங்கரன். என்னை எதுக்குக் கூப்பிட்ட அப்படின்னாராம். நான் உங்களைக் கூப்பிடலையேன்னாரு. ஏங்க மூணு தடவை சங்கரன் சங்கரன் சங்கரன்னு கத்திட்டு, என்னைக் கூப்பிடலையேன்னு சொல்றீங்களே. என்ன விளையாடறீங்களா, அப்படின்னு முறைச்சாராம். பக்கத்துல இருக்கறவங்களெல்லாம், ‘ஏங்க கத்தனீங்களே, எதுக்குக் கத்தனீங்க நடு கோயில்ல?’ அப்படின்னு கேட்க, பைத்தியம் பிடிச்சா மாதிரி ஆயிப் போச்சாம். அப்படியே கோயில்ல உட்கார்ந்துட்டாராம். அப்போ யாரோ தாண்டிப் போனவங்க, ‘சங்கரய்யர் ஏதோ விளையாடறாரு’ அப்படின்னு சொல்லிட்டுப் போனாங்களாம். அப்போதான் ஒரு பயம். ஒரு மரியாதை வந்ததாம்.



“அப்புறம் வந்து என்கிட்ட, ‘சங்கரய்யர் இருக்காரா?’ன்னு கேட்டார். மேலே ரொம்ப கூட்டமா இருக்கு. வாசல் படியெல்லாம் உட்கார்ந்துருக்காங்க. மாடிப்படியெல்லாம் ஆள் நிக்குது. இங்க வந்து உட்காருங்க. பாட்டு சத்தம் கேட்கும்னு நான்தான் முற்றத்துலே சேர் பிரிச்சுப் போட்டேன். அவரு அந்தப் பாட்டு சத்தம் கேட்டுட்டு அழுதுகிட்டே உட்கார்ந்திருந்தாரு. எப்படிம்மா சங்கரய்யர்னு கேட்டாரு. உங்களுக்குச் சொன்னா மாதிரிதான் அவருக்கும் சொன்னேன். ஃபோட்டோ இருக்கா அப்படின்னு கேட்டாரு. இருக்குன்னு நான் திரும்பறேன். மாடிலேருந்து சங்கரய்யர் எட்டிப் பார்த்து நான் மேலதான் இருக்கேன். வாரும். நேராவே பார்த்துடலாம் போட்டோ எதுக்கு அப்படின்னு கேட்கறாரு. அவருக்கு ஒரே ஆச்சரியம்.

மேலே போனா நீர் பொளக்கிற மாதிரி ஜனம் பொளந்து வழி விடுது. ஏக கும்பல் அன்னிக்கு. போய் பக்கத்துல உட்கார

வைச்சிட்டு 'அருணாசல சிவ... அருணாசல சிவ... அருணாசல சிவ... எல்லாரையும் சிவ நாமம் சொல்லச் சொல்லி ராமநாமம் சொல்லச் சொல்லி, கூட ஒரு மணி நேரம் பஜனை ஆச்சு. அப்புறம் பார்க்கலாம். பின்னாலே பேசிக்கலாம்னு வீட்டுக்கு அனுப்பிட்டாரு. வீட்டுக்குப் போனா தூங் கவே முடியலையாம். ஒரே பரபரப்பா இருந் ததாம். ராத்திரி முழுக்க தூங்காத, முன்னயும், பின்னயும் அலைஞ்சிட்டு மறுநாள் கார்த்தால ஓடி வந்து இனிமே நான் என் பொண்டாட்டிய மனசு நோகும்படி பண்ண மாட்டேன்னு சத்தியம் பண்ணி இன்னிய வரைக்கும் அந்தச் சத்தியத்தைக் காப்பாத் திக்கிட்டிருக்காரு. ரொம்ப நல்லா இருக் காங்க. அந்தம்மா இன்னும் பூ தொடுத்து கொடுக்கறதை நிறுத்தவேயில்லை. அந்த ஐயரு வாரத்துக்கு ஒரு ஒருதரம் வந்து சனிக்கிழமை மத்தியானம் மேல்மாடி, இரண்டாவது மாடி எல்லாத்தையும் ஒட்டடை அடிச்சுட்டு சுத்தம் பண்ணிட் டுத்தான் போவாங்க. எதுக்கு சிரமப் படறீங்கன்னு கேட்டேன். என் மனசை சுத்தம் பண்ணாங்க; அவர் வீட்டை நான் சுத்தம் பண்ணக் கூடாதா அப் படின்னு கேட்கறாரு. பண்ணுங் கன்னு விட்டுட்டேன். இந்த மாதிரி இன்னும் பலது!"

''ஹா... நாம போய் கேட்கலாமே."

ரேவதி ஆவலானாள்.

அந்தப் பெண்மணி சொல்வதை முழுவதும் நம்பினாள்.

ஆனால், ராதாகிருஷ் ணனுக்கு முழு நம்பிக்கை வரவில்லை.

என்ன வேண்டுவது, எதற்கு வேண்டுவது, ஏன் இவரை வேண்ட வேண்டும்?



எனக்கும் கடவுளுக்கும் இடையே இன்னொரு ஆள் எதற்கு? நான் காளிகாம்பாளை வேண்டிக் கொள்கிறேன். அல்லது எனக்குள் உறையும் இறைவனை வேண்டிக்கொள்கிறேன். எனக்கு பலம் தா என்று வேண்டிக்கொள்கிறேன். எனக்குத் தீர்வு தா என்று கேட்கிறேன். இதில் இன்னொரு ஆள் எதற்கு? சங்கரய்யர் என்ன உசத்தி? சங்கரய்யரால்தான் நான் மேலுக்கு வர முடியுமென்றால் என்னுடைய பலம் எதற்கு? இத்தனை நாள் நானும் பூஜை செய்து வந்தேனே அது அர்த்தமற்றதா? சங்கரரைப் பார்க்க வேண்டுமா, வேண்டாமா?

அவர் மறுபடியும் யோசித்தார்.

''யாராவது அப்பாவைப் பார்க்க உட்கார்ந்துண்டிருக்காளா?''

இருபது வயதுப் பெண் ஒன்று வந்து அந்த வீட்டுக்காரம்மாளைக் கேட்டது.

''ஆமாம். இவங்க இரண்டு பேர் இருக்காங்க.''

''இப்போ வர வேண்டாம். இன்னொரு சமயம் பார்த்துக்கலாம்னு அப்பா சொல்லிட்டா.''

அந்தப் பேச்சு ராதாகிருஷ்ணன் முகத்தில் அடித்தாற்போல் இருந்தது. மெல்லிய கோபம் வந்தது.

ரேவதி பயந்தாள்.

அந்த வாக்கியம் உள்ளே எரிச்சலூட்டியது. இப்போது வர வேண்டாம். பிற்பாடு வா என்று புறக்கணிப்பது மிக அவமானகரமான விஷயமாக இருந்தது. சட்டென்று ஒரு கோபம் பொங்கியது.

என்ன பெரிய சங்கரன். என்ன பெரிய பூஜை. மாடிக்குப் போய் நின்று, என்னடா இப்போ கூப்பிட மாட்டியா அத்தனைப் பெரிய கித்தாப்பா என்று வார்த்தை கேட்டுவிடலாம் என்று படபடப்பு வந்தது.

எத்தனைப் பேரை ராதாகிருஷ்ணன் அதிகாரம் செய்திருக்கிறார். எவ்வளவு காரியங்கள் சாதித்திருக்கிறார். தெருவில் நடந்தால் மதமாச்சாரியம் இல்லாமல் எத்தனை பேர் அவருக்கு வணக்கம் சொல்லுகிறார்கள். கல்யாண சீஸன் என்றால் எத்தனைக் கல்யாணப் பத்திரிகை வந்து வந்து குவிகிறது. யார் எங்கே பார்த்தோம், எதற்கு என்ற நினைவேயில்லை. ஆயினும் உங்களை நன்றாகத் தெரியும். நீங்கள் திருமணத்திற்கு வந்து ஆசீர்வாதம் செய்ய வேண்டும். நீங்கள் எப்போது வருகிறீர்கள்? நீங்கள் வருகிறீர்களா அல்லது நான் வண்டி அனுப்பட்டுமா என்றெல்லாம் கெஞ்சுகிறவர்கள் எத்தனை பேர்?

இப்படி சர்வசாதாரணமாக, இப்பொழுது வேண்டாம். இன்னொரு சமயம் வரலாம் என்று சொல்கிறாரே, என்ன திமிர்.

உள்ளுக்குள் கோபம் பொங்கிக் கொண்டிருக்கும்பொழுதே இன்னொரு சிந்தனையும் தோன்றியது.

இங்கு வந்தது எனக்காக. நானாக. அவருக்காக அல்ல. அவர் இங்கு அழைக்கவும் இல்லை. அழைத்துவிட்டு வெளியே போ என்று சொல்லவும் இல்லை. நாமாகத் தேடிவந்தபோது, எந்தவித முன் அனுமதியுமின்றி அவர் வீட்டை அணுகியபோது இப்போது வேண்டாம். அப்புறம் வா என்று சொல்லுகிறார். அப்புறம் வா என்று சொல்லுகிறாரே இதற்காகவாவது நன்றி சொல்ல வேண்டும். 'இங்கு என்ன வேலை, வெளியே போ' என்று சொல்லாமல் மிக மரியாதையாக நடத்தியிருக்கிறாரே இதற்காக நாம் வணக்கம் சொல்ல வேண்டும்.

எப்படிக் கோபப்பட்டாரோ ராதாகிருஷ்ணன் அப்படியே அமைதியானார்.

ரேவதிக்கு அந்தக் கட்டளை திகைப்பாக இருந்தது.

எப்படித் தெரிந்தது நாம் வந்தது.

''இங்கே நாங்க வந்திருக்கோம்னு எப்படியாவது சொல்லி அனுப்பினீங்களா?''

''இல்லீங்களே. ஆனா, அவருக்குத் தெரியும்.''

''நாங்க கை கால் கழுவற சத்தம் கேட்டுட்டு அவரைத் தேடி வர்றதா நினைச்



**''ஆறெழுத்தில் பெயர் இருந்தால்தான் நல்லதுன்னு ஜோதிடர் சொல்லிட்டாரு!''**

**''அதுக்காக ஈஸ்வர்ர்ர்னு உன் பெயரை நீட்டித் தொலைக்கணுமா என்ன?''**

**— உ. ராஜாஜி**

கக்கிட்டிருப்பாரா."

"இல்லீங்க. எங்க வீட்டுக்கு வரவங்களும் கை கால் கழுவி உள்ள வந்து உட்கார்ரவங்க தான். எங்க வீட்டுக்காரரும், கைகால் கழுவிக்கிட்டுதான் வருவாரு. வரபோற ஜனம் எங்க வீட்லயும் இருக்கத்தான் செய்யும். அவரைப் பார்க்க வந்திருக்கிங்கன்னு அவருக்கு எப்படியோ தெரிஞ்சுடும். எதுனா இப்படித்தான் சொல்லி அனுப்புவாரு."

"ஏன் வேணாம்னு சொல்லிட்டாரு? நாங்க ஏதாவது தப்பான ஆளுங்கன்னு தீர்மானிச்சுட்டாரா?"

"ச்சே..ச்சே... அப்படியெல்லாம் இருக்காதுங்க. அப்புறம் வாங்கன்னுதானே சொல்லி அனுப்பியிருக்காங்க. தப்பான ஆளா இருந்தா இங்க நடக்கறதே வேறே."

"என்ன நடக்கும்?"

"ஐயாவே திபுதிபுன்னு கீழ இறங்கி வருவாரு. வெளியே போடா. உன்னை எவண்டா கூப்பிட்டான். இங்க..... வெளிய போய் உன் வேலையைக் காண்பி. இங்க உள்ளே வராத அப்படின்னுவாரு. ரொம்ப பெரிய ஆளுங்களைக் கூட விரட்டி அனுப்பியிருக்காரு."

"பெரிய ஆளுங்கன்னா."

ராதாகிருஷ்ணன் மிக ஆவலாகக் கேட்டார்.

"நம்ம பேட்டையிலே ஒரு பிஸ்தா. அவன் எதுக்கோ ஐயாவைப் பார்க்கணும்னு வந்தான். இந்த வீட்டுப் படியேறினா ரத்தங் கக்கி செத்துப் போயிடுவேன்னாரு. அவன் பேசாத இறங்கி வெளிய போயிட்டான்."

"ஒண்ணும் பண்ணலையா?"

"மூஞ்சி வெளிறிப் போச்சு. ஏன் என் மேல இவ்ளோ கோவமா இருக்கிங்கன்னு படியிறங்கி தெருவுல நின்னு திருப்பிக் கேட்டான். நான் கோவமா இல்லைடா. கடவுள் உன் பேர்ல கோவமாயிருக்காருன்னு சொல்லிட்டார். அப்புறம் அவன் பேச்சைக் காணோம். அப்படியே தலை தொங்கி கார்ல வந்ததுகூட மறந்து போயி தெருவோரமா நடந்துபோயிட்டான்."

"சங்கரன் யாரு? சித்த புருஷரா, சன்னியாசியா, குறி சொல்றவரா, இல்ல சாஸ்திரிகளா?"

"எனக்குத் தெரியலைங்களே. நீங்கதான் பார்த்துச் சொல்லணும்."

அந்த அம்மாள் முகத்தைச் சாதாரணமாக வைத்துக்கொண்டு பேசினாள். இருந்தாலும் அவள் கண்ணோரம் கேலி இருந்தது.



"நம்ம ஏரியா இன்ஸ்பெக்டர் திருடனைப் பிடிப்பாருங்கிற நம்பிக்கை எனக்குப் போயிடுச்சு!"

"ஏன்?"

"'திருடனாய்ப் பார்த்து திருந்தா விட்டால் திருட்டை ஒழிக்க முடியாது'ன்னு சத்தமா பாடிட்டுத் திரியறாருன்னா பார்த்துக்கோ!"

— வி. சகிதா முருகன்

"ஏன், எங்களைப் பார்க்க முடியாது" என்று ரேவதி கேட்க சட்டென்று ராதாகிருஷ்ணன் அவளைக் கையமர்த்தினார். வேண்டாம் என்று சொன்னார்.

"அப்போ நாங்க வரோம்" என்று கை கூப்பினார்.

எதற்கு இப்படியொரு வேதனை. நான் யாரிடமோ கையேந்துவதால் இன்னும் என் வேதனை அதிகரிக்குமே தவிர குறையாது. நாம் சங்கரனிடம் வந்து எந்தத் தீர்வும் காணப்போவதில்லை. காண வேண்டும் என்று எவர் நிர்பந்தித்தாலும் அது அவசியமில்லை. இந்தத் துக்கத்தை ஏற்றுப் பழகிக் கொள்ள நான் முயற்சிக்க வேண்டுமே தவிர எப்படியேனும் எங்கேனும் எவராலேனும் தீர்த்து விடலாம் என்ற எண்ணத்தில் நான் வரவே கூடாது என்று உள்ளுக்குள் சங்கல்பம் ஏற்பட்டது. மெல்ல படியிறங்கினார்.

ஏனோ சட்டென்று தாகம் அதிகமிருந்தது. அந்தப் பெண்மணியிடம் போய் தண்ணீர் கேட்கலாமா என்று யோசித்தார்.

வேண்டாம். அவர்கள் வீட்டில் குளிர்ப்பெட்டி இல்லை. எனக்கு குளிர்ப்பெட்டியில் வைத்த நீர்தான் சரியாக வரும். நேரே எதிர்கடைக்குப் போனார்.

"ஐஸ் வாட்டர் இருக்கா?" என்று வினவினார்.

"இப்போதாங்க கொடுத்தேன்" என்று சொன்னார்.

"சரி, கூல்ட்ரிங்க் ஏதாவது இருக்கா?"

"இருக்குங்களே."

அவன் திறந்து இரண்டு மூன்று காட்டினான். இரண்டு ஆரஞ்சு உடைக்கச் சொன்னார்.

"எனக்கு வேண்டாமே."

ரேவதி மறுத்தாள்.

"பரவாயில்லை சாப்பிடு."

அந்தக் குளிர்பானம் அந்த நேரத்திற்கு மிக இதமாக இருந்தது. உறிஞ்சிக் குடிக்கக் குடிக்க உடம்பு முழுவதும் குளுமை பரவியது. கண் செருகியது.

உறிஞ்சிக் குடிப்பதைவிட உயரத் தூக்கிக் குடிப்பது நல்லது என்று திடீரென்று




## ஆஹா

தீவிரவாதிகளை ஒடுக்கவும், வல்லரசு நாடுகள் அணு ஆயுதத்தை உபயோகிக்கக் கூடாது என்பதை வலியுறுத்தவும், அண்மையில் ஜார்ஜ் புஷ்ஷும், புட்டினும் ரஷ்யாவில் அமைதி ஒப்பந்தம் செய்து கொண்டனர். அப்போது - ஜார்ஜ் புஷ்ஷை வரவேற்பதற்காக பல ஆண்டுகளுக்கு முன் குருஷேவ்வும், நிக்சனும் இருந்த இந்த பழைய படத்தைப் பிரம்மாண்டமான எலக்ட்ரானிக் போஸ்டர்களாக மாற்றி அமைத்து வரவேற்பு தந்தது பெப்சி நிறுவனம்.

- பாரீஸ் பார்த்தசாரதி

பட்டது. பாதி இருக்கும்போது அந்தக் குளிர்பானத்தை உயரத் தூக்கிக் குடிக்க முற்படும் போது அந்த வீட்டு மாடியில் யாரோ நான்கைந்து பேர் நின்று அவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. மூன்று ஆண்களும், ஒரு பெண்மணியும் இருந்தார்கள். அந்த ஆண்களெல்லாம் மத்திய வயதை அடைந்தவர்களாக இருந்தார்கள். அந்தப் பெண்மணியும் நாற்பது வயதுக்குரியவளாக இருந்தாள். அவர்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அதுதான் சங்கரன் வீடு. ஆனால் அதில் சங்கரன் யார்?

அவர் அவர்களையே வினோதமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"மூர்த்தி, வாங்க வேண்டாம்."

மேலிருந்து அந்தப் பெண்மணி குரல் கொடுத்தாள்.

கடையிலுள்ளவன் சற்றுக் குனிந்து மேல்மாடியைப் பார்த்துவிட்டு சரிங்க என்று சொன்னான்.

ராதாகிருஷ்ணன் வினோதமாக அந்தக் கடைக்காரனைப் பார்த்தார்.

"உங்களுக்குத்தான் சொல்றாங்க."

"என்ன சொல்றாங்க."

"கூல்டிரிங்க்ஸுக்குக் காசு வாங்க வேண்டாம்னு சொல்றாங்க."

"ஏம்ப்பா...?"

"தெரியலைங்களே. ஐயா, வாங்க வேண்டாம்னு சொல்லிட்டா வாங்க வேணாம்தான்."

"நான்தானேப்பா உங்கிட்ட வாங்கினேன். அவங்க எப்படிப்பா காசு கொடுக்கலாம்?"

"அது தெரியாதுங்க. ஐயா, உங்ககிட்ட காசு வாங்க வேணாம்னு சொல்லிட்டாரு."

"அதெல்லாம் எனக்குத் தெரியாதுப்பா. இந்தா காசைப் பிடி. ஒண்ணு பன்னிரண்டு ரூபாயா, இந்தா இருவத்தி நாலு ரூபா."

சில்லரையை எண்ணி வைத்தார்.

மூர்த்தி மறுபடியும் நிமிர்ந்து மாடியைப் பார்த்தான்.

"வாங்க வேணாம்னு சொல்றாங்க."

"நான் கொடுப்பேன்னு சொல்லப்பா. நான் குடிச்சதுக்கு அவங்க காசு கொடுக்கக் கூடாது."

"வேணாங்க. அப்படிப் பண்ணாதீங்க. சங்கரன் ஐயா ஏதாவது செய்தா சரியாத்தான் செய்வாரு. அவரு உங்கக் கிட்ட காசு வாங்க வேண்டாம்னா காரணம் இருக்கும். முரட்டுத்தனம் பண்ணாதீங்க."

இரண்டு பேரையும் மாறி மாறி பார்த்துக் கொண்டிருந்த ரேவதி சட்டென்று அமைதியானாள்.

"வேண்டாம். காசு தர வேண்டாம்."

அவர் வைத்த காசை அவன் எடுத்துக் கொண்டு தன் கையில் சுருட்டி வைத்துக்

கொண்டான்.

"வாங்க, ரொம்ப வேகப்படாதீங்க" என்று நகர்ந்து போனாள்.

"**உ**னக்கு அறிவே கிடையாது ரேவதி."

"அதுதான் தெரிஞ்சுருக்கே. இதை நடுரோட்ல வேறே சொல்லணுமா" என்றாள்.

"ஏன், இந்த மாதிரி பண்றே?"

"நீங்க தேவையில்லாமல் ஒரு சண்டைக்குப் போற மாதிரி எனக்குப் பட்டுது. உங்களுக்கு என்னவோ கஷ்டம். ஏதோ வேதனை. அதை மத்தவா காது கொடுத்துக் கேட்கலைன்னா உங்களுக்குக் கோவம் வரும். அவங்களுக்குக் காது கொடுத்துக் கேட்காத ததற்கு ஏதாவது காரணம் இருக்கும். இத்தனை பேர், கீழ் வீட்டு அம்மா, எதிர்வீட்டு கடைக்காரன் எல்லாரும் மரியாதையா நடத்தறவாளை நீங்க வேணும்னே அவமரியாதையா பண்ணா அது தேவையில்லாத விஷயம்னு தோணித்து. இந்தச் சங்கரனைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கேன்."

"எங்கிட்ட சொல்லவே இல்லையே."

"இப்போதான் ஞாபகம் வந்தது. அவரை சங்கரன்னு எங்கிட்ட சொல்லலை. ஐயரு... ஐயருன்னு சொன்னாங்க. நான் யாரோ சிவாச்சாரியார் இல்லை, வைதிகம்னு நினைச்சுட்டேன். இப்போதான் புரியறது. ஏம்ப்பா... அந்த சங்கரன் ஐயர் படம் இருக்கா" மிருதுவாக ரேவதி கடைக்காரனைக் கேட்டாள்.

அந்த கடைக்காரன் வந்திருந்த வாடிக்கையாளர்களைக் கவனித்துவிட்டு ஒரு நோட்டுப்புத்தகம் திறந்து அதன் நடுவே மடித்து வைத்திருந்த ஒரு பழைய அச்சிட்ட பேப்பரை அவனிடம் நீட்டினான்.

உலக நலன் பொருட்டு ஹோமம், நாமாவளி என்று போட்டிருந்தது. கூட்டுப் பிரார்த்தனை பற்றி விவரித்திருந்தது.மேலே உச்சியில் அம்பாள் படம். அதற்கு நேர்க் கீழே அவருடைய படம். நீல நிறத்தில் சற்று குழப்பமாய் அச்சிடப்பட்டிருந்தது. நீண்ட சிகை, கழுத்துப் பின்னே பிரித்துவிடப் பட்டிருந்தது. நெற்றியில் குங்குமம், விபூதி வெள்ளையும், கறுப்பும் கலந்த தாடி. தோளில் துண்டு, கழுத்தில் மணிமாலைகள். சற்றுப் பருமனான உடம்பு என்று தோளைப் பார்த்தே தெரிந்து கொள்ள முடிந்தது.

"நானே வைச்சுக்கிட்டுமாப்பா..."

ரேவதி ஆவலாகக் கேட்டாள்.

அவள் ஆவலைச் சற்று கேலியாக ராதாகிருஷ்ணன் கவனித்தார்.



**"உன் வீட்ல இருக்கற அயிட்டத்தை எல்லாம் கொஞ்சம் வரிசைப்படுத்திச் சொல்லேன்!"**

**"எதுக்கு?"**

**"உன்கிட்ட எதை இரவல் வாங்க வந்தேன்னு மறந்துடுச்சு"**



**"தலைவருக்கு உலக அறிவே இல்லை!"**

**"என்னாச்சு?"**

**"கூலி கொடுத்தும் பாதி மீட்டிங்லே எழுந்து வெளிலே போனவங்க மேலே நுகர்வோர் நீதிமன்றத்துலே புகார் கொடுக்க முடியுமானு கேட்கறார்!"**

**- அம்பை தேவா**

"வைச்சுக்கோங்கம்மா, உங்களுக்குத்தான்" என்று கடைக்காரன் மிகப் பெரிய பொக்கிஷத்தைத் தானம் கொடுப்பது போல கம்பீரமாகக் கொடுத்தான்.

ரேவதி அதை வாங்கி மடித்து கையில் வைத்துக் கொண்டு வீடு நோக்கி நடந்தாள்.

ராதாகிருஷ்ணன் பின்தொடர்ந்தார்.

(தொடரும்)



• கை கெட்ட பின்...



“ 16 வயசுக்கு மேலே ‘அடல்ட்’ என்று விட்டால் நன்றாயிருக்கும்” என்று புலம்புவது, வோட்டு வேட்டையாடும் அரசியல்வாதிகளல்ல; சமூகத்தில் வோட்டு போடுபவர்களைத் தேட்டை போட்டுக் கொண்டிருக்கும் காவல் துறையினர்தான். இந்த ஸ்கூல் பசங்களெல்லாம் அவர்களை இந்த ஆட்டம் ஆட்டி வைத்து விட்டனரே? ஆசாத் மைதானமருகே கூடியிருந்த 5000 சொச்ச செகண்டரி பள்ளிக் குழந்தைகள், பெற்றோருடனும் டீச்சர்களுடனும் சேர்ந்து, ஸ்கூல் ஃபீஸ் அதிகரிப்பை எதிர்த்து நடத்திய ஐந்து மணி நேரப் போராட்டத்தில் மும்பையின் போக்குவரத்தே ஸ்தம்பித்தது. போலீசார் என்ன சொல்லியும் கேளாமல், மாணவர்கள் காவல் துறையினரையே சவால்விட்டு, தங்கள் பெற்றோரைக் கைது செய்தால் கலவரம் வெடிக்கும் என்று அச்சுறுத்தி, வசைபாடி, அழுது, அடம்பிடித்து, ஒரே ரகளை. “ஒரு சிலர் தாதாக்களைப் போல் எங்களை மிரட்டினர்; ‘குழந்தைகள்’ என்ற பட்டத்தைச் சுமந்ததால் எங்களால் அடிக்கவும் முடியவில்லை” என்று நொந்து கொண்டது காவல்துறை. அந்தப் பக்கம் வந்த ஒன்றிரண்டு எம்.எல்.ஏ.க்களையும் ஒரு மந்திரியையும் கூட கோஷம் போட்டுத் திருப்பி அனுப்பி விட்டனர். மாசம் ஐந்து ரூபாய் ஃபீஸ் கட்டிக் கொண்டு, ஹாய்யாக காற்று வாங்கியவர்களை, பெற்றோரின் வருவாய் அடிப்படையில், மாதம் நூறோ (ரூ.50,000 - 1 லட்சம்), இரு நூறோ (1 - 2 லட்சம்), அதிக பட்சம் முந்நூறோ கட்ட வேண்டும் என்றால், கொதித்தெழாமல் என்ன செய்வார்கள்? ஏஸி ரூமில், வியர்க்க விறுவிறுக்க உட்கார்ந்திருந்த விலாஸ் ராவ் தேஷ்முக், எடுத்த முடிவை மறு பரிசீலனை செய்வதாகச் சொல்கிறார்!

கருத்து தெரிவிப்பது இன்ன விஷயத்துக்குத்தான் என்ற விவஸ்தையே, வரவர இல்லாமல் போய்க் கொண்டிருக்கிறதே? லார்ட்ஸில் இந்தியா வெற்றி பெற்றதும், சௌரவ் கங்குலி தன் ஜர்ஸியைக் கழற்றி, காற்றில் சுற்றினாரா? மெடல்கள் அலங்கரித்த அந்த வெற்(று?)றி மார்பைக் கண்டு மும்பைப் பெண்கள் மயங்கினார்களா என்று கன அக்கறையாக ஓர் ஆய்வு! அதுவும் பிரபல ஆங்கில தினசரியில்! கோரியோகிராஃபர் சங்கீதா சோப்ரா, மெடல்மாலை அணி மார்பினைச் சரியாகப் பார்க்கவில்லை என்கிறார். “என்ன இருந்தாலும் கிரிக்கெட் காப்டன் ஆயிற்றே? ஒரு மரியாதைதான்” என்கிறார்!

பிரபல மாடலும், நடிகையுமான

தீபானிகா ஷர்மா, "சௌரவ்வுக்குப் பீற்றிக் கொள்ளும்படியான 'பாடி' இல்லைதான்! இருந்தாலும், வினாடி நேர வெற்றி மதர்ப்பில் உணர்ச்சி வசப்பட்டுவிட்டார். அது தவறாகத் தெரியவில்லை" என்றார். ஆனால், பத்திரிகைத் துறையில் பழம் சாப் பிட்டுக் கொட்டை போட்ட ஷோபாடே, "இது நன்றாக யோசித்து, திட்டமிடப்பட் டுச் செய்யப்பட்ட செயல்தான்! இங்கி லாந்து வெற்றி பெற்றபோது, இங்கிலீஷ் ஆல்-ரவுண்டர் ஆண்ட்ரு ஃபிளின்டாஃப் இப்படித்தானே பீற்றிக் கொண்டார்?

# கழற்றி... சுழற்றி... வெற்றி!



மும்பை மசாலா

அதற்குப் பதிலடிதான் இது: ஆனாலும் உடலைப் பொருத்தவரையில்... ஸாரி டார்லிங்... நீ இன்னும் உழைக்கணும்ப்பா" என்று விட்டார். போகிற போக் கைப் பார்த்தால், 'வெற் றுடம்பு வீரர்' சல்மான் கானுக்கு, ஸ்போர்ட்ஸ் ஃபீல்டில் எக்கச்சக்க போட்டி முளைக்கும் போலிருக்கிறதே?

**போ**ட்டி முளைக்கும் போலிருக் கிறதே என்ற பயத்தில் தான் நடிகைகள் கொலைப்பட்டினி கிடந் தாவது உடலழகைக் காப் பாற்றிக் கொண்டிருக் கிறார்கள். ஆனால் "தயவு செய்து 'க்ராஷ் டயட்டிங்' எல்லாம் செய்யாதீர்கள். ஒல்லிதான் அழகு என்பது உண்மையல்ல. உடல் நலனைக் காட்டிலும் உடல் அழகு முக்கியமல்ல" என்று கதறுகிறார் யுக்தா முகி! ஆறு பரோட்டாக்களும், பாதாம் பாலும் சாப்பிட்டு கொழுமொழுத்திருந்த 'யுக்தா முகி' மூன்று வருடங்களாக, அழகிப் போட்டி, ஹீரோயின் சான்ஸ் என்று வெந்த காய்கறியும் வேகாத பழமுமாய் உண்டு 'யுக்தா முனி'யாக மாற, உடம்பு ஏழு கிலோ எடையுடன் முக்கியமான கால்ஷியம் சத்தையும் இழந்தது. அதனால், சின்ன சறுக் கலுக்கே, இடது கையில் 'மல்டிபில் காம்ப் பவுண்ட் ஃப்ராக்சர்' "பெரிய எலும்பு முறிவு சர்ஜனான பெரியப்பா முகி, 'பட்டினி கிடந்த தன் பயனைப் பார்த்தாயா?' என்று கோபிக்கிறார். "இளம் பெண்கள் கன்னா பின்னா வென்று டயட்டிங் செய்வது அபாய கரமானது" என்கிறார் டாக்டர் வோரா. இடையழகைக் காட்டிலும் 'எடை' அழகு?

— ஜெயஸ்ரீ ராஜ்

## காதில் விழுந்தவை



• விருதுநகர் உற்சாகம்...

படம்: ராஜன்

● 'பொடா' சட்டத்தின் அடிப்படையில் வைகோ மீது நடவடிக்கை எடுத்தது, "ராஜகுரு'வுக்கு எரிச்சலை ஏற்படுத்தியிருந்தாலும், எந்தவிதமான மணிச் சத்தத்தையும் வெளிப்படுத்தாமல் அமைதி காத்துக் கொண்டிருக்கிறார். பல நிருபர்கள் அவரைப் பேட்டி காண முயன்றும் யாரையும் அவர் சந்திக்க விரும்பவில்லை. சமீபத்தில் வடநாட்டு டீ.வி நிருபர் ஒருவர் காமிராவுடன் பெரியார் திடலுக்குப் போய், உதவியாளர்கள் தடுத்தும் கேளாமல் அவரின் அறைக்குள்ளே நுழைந்து விட்டாராம். "யார் நீங்க?... யாரைக் கேட்டு உள்ளே வந்தீங்க? அத்துமீறி நுழைந்தீர்கள் என்று போலீஸில் பிடித்துக் கொடுத்து விடுவேன்" என்று புயலென அவர் மீது பாய்ந்து விட்டாராம் 'மணி'யார். 'விட்டால் போதும்' என்று ஓடியே வந்து விட்டாராம் நிருபர். இதற்கிடையில் அவரது கோபத்தைப் புரிந்துகொண்ட அம்மா, சாந்தப்படுத்தும் விதமாக அவருக்கு ஏதாவது பொறுப்பு கொடுக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறாராம்.

● விருதுநகரில் வெற்றிகரமாக காமராஜ் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடிவிட்டு வந்த சந்தோஷத்தில் இருக்கிறார் இளங்கோவன். காங்கிரஸின் சமீபத்திய வரலாற்றில் அவ்வளவு பெரிய கூட்டம் வந்ததில்லையாம். த.மா.கா இணைப்புக்குப் பிறகு நீடிக்கிறோமோ இல்லையோ என்பதைப் பற்றிக் கூட கவலைப்படாமல் சூட்டோடு சூடாக வாழப்பாடியார் மீது பாய்ந்து விட்டார் இளங்கோவன். "நீக்கப்பட்ட கட்சிப் பிரமுகர் சுத்திபாரா ஜனார்த்தனன் நடத்திய காமராஜ் நூற்றாண்டு விழா கூட்டத்தில் கலந்து கொண்டதற்காகவும், கர்நாடக காங்கிரஸ் அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்று பேசியதற்காகவும், "உங்கள் மீது ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது?" என்று ஷோகாஸ் நோட்டீஸ் விட்டார் வாழப்பாடி மீது. மீண்டும் 'கலகலா' காங்கிரஸ் ஆகிவிட்டது. "வாழப்பாடி கட்டுச்சாதத்துக்குள் உள்ள பெருச்சாளி போன்றவர். வெறும் 23 பேருடன் தில்லிக்குச் சென்று காங்கிரஸில் மன்னிப்புக் கடிதம் கொடுத்து இணைந்தவர். இப்போது தேவையில்லாமல் இளங்கோவனை எதிர்த்து பாலிடிக்ஸ் செய்கிறார்" என்று சொல்கிறார், மாவட்ட காங்கிரஸ் தலைவர் ஒருவர். காமராஜ் நூற்றாண்டு விழாவையே ஒன்றாகக் கொண்டாட முடியாத இவர்கள் அனைவரும் 'காமராஜர் ஆட்சியை எப்படி கொண்டு வரப் போகிறார்களோ?" என்று வியக்கிறார்கள் மக்கள்.

# பேராசிரியை ஜெயலலிதா!

● இப்போதெல்லாம் கோட்டையில் அம்மா, பத்திரிகையாளர்களைச் சந்திப்பதென்பது ஒரு பேராசிரியர் வகுப்பெடுக்கும் கல்லூரி அறை அனுபவத்தைத்தான் நினைவு படுத்துகிறது என்கிறார்கள் கோட்டையை கவர் செய்யும் சீனியர் நிருபர்கள். "முதல்வர் சொல்வதை எழுதிக் கொள்ளுங்கள்" சங்கடப்படுத்தும் கேள்விகள் வேண்டாமே" என்று 'அன்புடன்' நிருபர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். எதிர்க்கட்சி சார்பான பத்திரிகை நிருபர்கள் கூட சில பல வசதிகளுக்காக கேள்வி எதுவும் கேட்காமலே நழுவி விடுகிறார்களாம்.

— சஞ்சயன்


அப்துல் கலாம்
மும்தாஜ், மௌனிகா
லியோனி...
இவங்களுக்கெல்லாம் என்னவாம்?
அடுத்த பக்கம்
இவங்க சம்பந்தப்பட்ட...
ஜோக்ஸ் வந்திருக்கே!



"உங்க பையன் பிழைச்சுக்குவான் சார்."

"எதை வைச்சு சொல்றீங்க?"

"தலைமுடி இவ்வளவு நீளமா வைச்சிருக்கியே, கட்டிங் பண்ணிக்கலையான்னு கேட்டதுக்கு, இது 'கலாம் ஸ்டைல் அங்கிள்'னு சொல்றானே!"

- சீர்காழி வி.ரேவதி



"என்னது, இந்தம்மா 'அழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்'னு சொல்லியிருக்காங்க...?"

"மெகா சீரியல் நடிகையாச்சே சார்!"



"'நாடு முன்னேறாதத்துக்குக் காரணம் அரசாங்கமா, பொது மக்களா'ன்கிற பட்டிமன்றத்தில் 'பொது மக்களே'ன்னு தீர்ப்பு சொல்லிட்டீங்களாமே, நியாயமா?"

"பின்னே, பட்டிமன்றத்துக்கு ஏழெட்டுப் பேர் கூட வரலேன்னா கடுப்பா இருக்காதா!"

- உ. ராஜாஜி



"அந்த நடிகை, ஆரம்ப காலத்தில் கவர்ச்சியா நடிக்க வெட்கமாயிருக்குன்னு சொல்லி மறுத்துக்கிட்டிருந்தாங்க.."

"இப்ப?"

"அவங்க கவர்ச்சியா நடிக்கறேன்னு சொன்னா, டைரக்டரே சீ, போம்மா வெட்கமாயிருக்குங்கறார்."

- சாயம் வெ. ராஜாராமன்

ஸ்ரீசுந்தர விநாயகர் துணை　　　உ　　　ஸ்ரீ மூங்கில் அணை காமாட்சி அம்மன் துணை

தினசரி காலை, மாலை காபி, 3 வேளை சைவ உணவு, ஊர்கள் சுற்றிப்பார்க்கும் பஸ் கட்டணம், தங்கும் செலவு உட்பட 3 Tier இரயில் சுற்றுலாக்கள் சென்னையிலிருந்து புறப்படுகின்றன.

## டெல்லி – ஜெய்ப்பூர் – காசி – கல்கத்தா – பூரி ரூ. 5790

10–8–2002, 12–9–2002 மற்றும் 24–10–2002 (தீபாவளி சுற்றுலா) முதல் 18 நாட்கள்

மதுரா – ஆக்ரா – பிருந்தாவன் – ஜெய்ப்பூர் – டெல்லி – அமிர்தசரஸ் – வாகா பார்டர் – ஹரித்துவார் – ரிஷிகேஷ் – திரிவேணி – காசி – கயா – புத்தகயா – கல்கத்தா – பூரி – புவனேஸ்வர் – கோனார்க்

## பத்ரிநாத் – கேதார்நாத் – காசி ரூ. 4990

12–9–2002 மற்றும் 21–10–2002 முதல் 14 நாட்கள்

மதுரா – ஆக்ரா – பிருந்தாவன் – டெல்லி – ஹரித்துவார் – ரிஷிகேஷ் – பத்ரிநாத் – கேதார்நாத் – திரிவேணி – காசி – சாரணாத் – வியாச காசி (பத்ரிநாத், கேதார்நாத் பஸ் கட்டணம் உட்பட)

## குறைந்த நாட்கள் – குறைந்த கட்டணம் – தீபாவளி சுற்றுலாக்கள்

★ லட்டு தேர் – தங்க அன்னபூரணி – தங்க விசாலாட்சி தரிசனம் செய்யலாம்.

★ 31–10–2002 முதல் 10 நாட்கள் – கல்கத்தா–கயா–புத்தகயா–காசி–திரிவேணி ரூ. 2990

★ 28–10–2002 முதல் 12 நாட்கள் – பண்டரிபுரம்–மும்பாய்–திரிவேணி–காசி–கயா ரூ. 3690

★ 28–10–2002 முதல் 15 நாட்கள் – பண்டரிபுரம்–மும்பாய்–திரிவேணி–காசி–கயா கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க் ரூ. 4590

குறிப்பு : மேற்கண்ட சுற்றுலாக்களுடன் **நேப்பாள்** சென்றுவர பஸ் கட்டணம் உட்பட 5 நாட்கள் கூடுதல் ரூ. 2000 தனி

# சன் டிராவல்ஸ்

*Prop. K. சிதம்பரம்*, B.Sc., B.Ed.,
செல் : 98421 – 56668

121, நேதாஜி ரோடு, (மாடர்ன் ரெஸ்டாரெண்ட் எதிரில்) மதுரை – 1. போன் : 341133, 344466 வீடு : 441133

**சென்னை :** சன் டிராவல்ஸ், 30 நடேசன் தெரு, (பேர்ன்பாஜ் காம்ப்ளக்ஸ்) T. நகர், சென்னை–17. போன் : 4359194

**கும்பகோணம் :** பிரசாத் போட்டோ ஸ்டுடியோ 13-8, கோதண்டபாணி தெரு, கும்பகோணம். போன் : 433550

---

# GRAND INSTITUTE OF FASHION TECHNOLOGY

AFFILIATED TO

**RAFFLES LA SALLE INTERNATIONAL DESIGN SCHOOL, SINGAPORE**
**TRANSFER PROGRAMME TO TEMASEK DESIGN SCHOOL, SINGAPORE**

## COURSES OFFERED

- FASHION DESIGN
- ACCESSORY DESIGN
- FASHION DESIGN ADVANCED PROGRAMME
- APPAREL MERCHANDISING AND MANAGEMENT

- FASHION COMMUNICATION
- VISUAL COMMUNICATION
- MODELING
- EVENT MANAGEMENT

Course Duration : 6 Months to 3 Yrs

**"MODELING WORKSHOP"**
Will Commence Shortly
Registration Open

**ELIGIBILITY :**
10 , +2 & GRADUATES
* HOSTEL FACILITY AVAILABLE

**PROSPECTUS & APPLICATION FORMS AVAILABLE AT :**

EVENING & SHORT TERM COURSES AVAILABLE

# 5, INNER RING ROAD, THIRUMANGALAM,
ANNA NAGAR (W), CHENNAI - 600 040.
TELEFAX : 6215888 / 6284928 MOBILE : 9841007697
E-MAIL : gift@vsnl.net

Limited Seats Only

# வாஸந்தி

# 16

அறையில் நிலவிய மௌனம் அசாதாரணமானதாக இருந்தது. அதைக் கலைக்கும் துணிவு யாருக்கும் இல்லாததுபோன்ற ஒரு சங்கடம் அழுத்திற்று. தான் நிலைமையைத் தவறாகக் கையாண்டுவிட்டதாக விவேக்கிற்கு தன் மீதே எரிச்சல் ஏற்பட்டது. ஒரு சொந்தப் பந்தயத்தில் தனக்கு வெற்றி கிட்டிவிட்டதான பாவனையுடன் அமர்ந்திருந்த சரவணனின் கழுத்தைப் பிடித்து அறையைவிட்டு வெளியேற்றினால் என்ன என்று கைகள் பரபரத்தன. ராஜாவின் கன்னத்தில் இரண்டு வைத்தால் ஒன்றும் தப்பில்லை என்று ஆத்திரம் வந்தது. சில வருட ஞாபகம் நழுவிப் போனால் ஒரு மனிதனின் பாத்திரத்தன்மையே மாறிப் போய்விடும் என்பதை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. ராஜா, இன்னமும் தலையசைத்துக் கொண்டிருந்தான். என்னால் நம்ப முடியாது. அவன் தோளை உலுக்க வேண்டும் போல் இருந்தது. டேய் நினைவு படுத்திக் கொள்ள முடியவில்லையானால், நான் சொல்கிறேன், உன்னைப் பற்றி. மணிக் கணக்கில் திருமணச் சடங்குகளை எதிர்த்து, அவை நில ஆதிக்க அர்த்தங்கள் கொண்டவை என்று உறுதியாகச் சொன்னவன். ஒரு காகிதத் துண்டில் கையெழுத்துப் போடுவதால் மட்டுமே இருவர் பரஸ்பர நம்பிக்கையுடன் வாழ்வதற்கு உத்தரவாதம் என்பதும் எனக்கு அருவருப்பைத் தருகிறது என்றவன்.

'என் பிரியத்திற்குச் சட்டத்தின் முத்திரை வேண்டாம், தேங்க் யூ!'

'அந்த முத்திரையைக் கொண்டா' என்கிற சரவணனின் மகன், இப்போது இங்கு உட்கார்ந்திருப்பவன். இவனுக்குச் சில வருடத்து நினைவுதான் போய்விட்டதே தவிர, மூளை இயங்குகிறது. சரவணனும் டாக்டரும் இல்லாமல் இருந்திருந்தால் இவனை வழிக்குக் கொண்டு வந்திருக்க



முடியும். ஆனால் இது மருத்துவ பிரச்னை என்பதை மறக்கக் கூடாது என்பதை ஞாபகப்படுத்தவே டாக்டர் எதிரில் இருக்கிறார்.

டாக்டர் கனைத்துக் கொண்டார். அவர் பேச ஆரம்பிப்பதற்கு முன்

சரவணன் பேசினார்.

'டாக்டர்! இவர்கள் பேசுவதை என்னாலும் நம்ப முடியவில்லை. என் மகன் இருபத்தைந்து வயசு வரை எங்களோடு இருந்தவன். மரபுகளை மதிக்கும் கௌரவமான குடும்பம் எங்களுடையது. சடங்கு வேண்டாமென்றாலும் ரெஜிஸ்டர் கல்யாணம்கூட வேண்டாம் என்று என் மகன் எந்த புத்தி பேதலித்த நிலையிலும் சொல்வான் என்று நான் நினைக்கவில்லை.''

விவேக் தனது ஆத்திரத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு கேட்டான். "அப்போது நாங்கள் பொய் சொல்கிறவர்களாக, ஏமாற்றுபவர்களாக படுகிறதா உங்களுக்கு?"

சரவணன் முறைப்புடன் ராஜாவிடம், "சுத்த திமிர்பிடித்த பசங்கடா இவங்க!" என்றார் தமிழில்.

ராஜா தீவிர குழப்பத்தில் இருப்பவன் போல் உட்கார்ந்திருந்தான்.

"மிஸ்டர் சரவணன். நீங்கள் கொஞ்சம் நிதானப்படுத்திக் கொள்ள வேண்டும்'' என்றார் டாக்டர் சென்குப்தா. "ஸ்தாபனங்களில் நம்பிக்கையில்லாத பலர் இப்படி இங்கும் வாழ்கிறார்கள். இது தவறு என்று சட்டம் சொல்லவில்லை.''

விவேக் குறுக்கிட்டான் "கமான், இப்போது பிரச்னை அதுவல்ல. மிஸ்டர் சரவணன், நீங்களும் ராஜாவும் நம்ப வேண்டும். ராஜாவும் சகுந்தலாவும் அப்படித்தான் வாழ்ந்து வந்திருக்கிறார்கள், எங்களுக்குத் தெரிந்தவரை மிக சந்தோஷமாக. அப்படி வாழ்வது சரியா தவறா, கௌரவமா அகௌரவமா என்கிற நேரமில்லை இது. இவனை எதிர்பார்த்து, இவனை நம்பி சகுந்தலாவும் இவன் குழந்தையும் இருப்பது உண்மை. ராஜா, நீ நம்புகிறாயோ இல்லையோ, அதுதான் உண்மை. நீ அதை ஏற்றுக் கொள்ளத்தான் வேணும்.''



# பொய்யில் பூத்த நிஜம்

சரவணன் ஏதோ படபடப்புடன் பேச முற்பட்டபோது டாக்டர் சைகை காட்டி அவரை அடக்கினார்.

"உங்கள் குழப்பம் எனக்குப் புரிகிறது ராஜமோஹன். ஆனால் விவேக் சொல்வது போல இப்போது யதார்த்தத்தைப் பற்றி யோசிக்க வேண்டும்' என்றார். "இன்னும் இரண்டு நாளில் நீங்கள் டிஸ்சார்ஜ்

ஆகிறீர்கள்."

ராஜா கடைசியில் வார்த்தைகளை அளப்பது போலச் சொன்னான்.

"அதுவரை எனக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுங்கள்."

**வி**வேக் சொல்வதை அவள் ஒரு வித ஜடத்தன்மையுடன் கேட்டபடி அமர்ந்திருந்தாள். இந்தியா கேட் புல் தரை எப்போதும் போல கலகலப்பாக இருந்தது. காதல் ஜோடிகள், கிறீச்சிட்டுக் குதூகலிக்கும் சிறுவர்கள் சிறுமிகள், தள்ளுவண்டியில் குழந்தைகளைத் தள்ளிக் கொண்டு தங்கள் மேம்சாபுகளைப் பற்றின விமர்சனத்தில் லயித்திருக்கும் ஆயாக்கள். மல்லிச் சரங்களை விற்கும் மோக்ரா சிறுமிகள்.

புல் தரையில் அவள் விரித்திருந்த ஜமுக்காளத்தில் பொம்மைகளுடன் உட்கார்ந்திருந்த பரத்துக்கு சுதிர் விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தான். அவன் பேச்சுக்கெல்லாம் பரத் களுக் மளுக்கென்று சிரித்துக் கொண்டிருந்தான். பழைய நாட்கள் போல மயக்கம் ஏற்பட்டது. சுற்றுப்புறம் மாறவில்லை. 'மோக்ரா லீஜியே மேம்சாப்' என்று வழக்கம் போல கெஞ்சிய சிறுமியிடமிருந்து ஒரு சரம் வாங்கி தலை முடியில் வைக்க முடி போதாமல் வழக்கம்போல கைமணிக்கட்டில் சுற்றிக் கொண்டபோது சகுந்தலை படச் சுருள் விரிந்தது. ஊஞ்சலை நெக்கித் தள்ளும் பாதங்கள் தெரிந்தன. 'ஆனந்தமென் சொல்வேனே' பாட்டு கேட்டது. அவள் மெல்ல நிமிர்ந்து விவேக்கைப் பார்தாள். அவளிடம் விவரிக்க அவன் படும் சங்கடத்தை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. விஷயத்தைத் தான் கெடுத்துவிட்டதாக அவனுக்குக் குற்ற உணர்வு வேறு இருந்தது.

"சரவணனுக்குத் தகவல் தெரிவித்ததே தப்பு. வரவழைத்ததே தப்பு! நீ தயங்கினதிலே அர்த்தம் இருந்தது. நானும் சுதிரும் அதைப் புரிஞ்சுக்கல்லே!"

அவள் மெல்லச் சொன்னாள்.

"யாரும் எந்தப் தப்பும் பண்ணல்லே. நம்ம டைம் சரியில்லேன்னா நாம என்ன பண்ண முடியும் விவேக்?"

"இல்லே. அந்த மனுஷன் அங்கே இல்லாம இருந்திருந்தா இந்தப் பிரச்னை வந்திருக்காது. சுதிர் அவர்கிட்ட உளறினதாலே அவருக்கு ராஜாவைப் பற்றியும் சந்தேகம் வந்துட்டது. அதான் விடாப்பிடியா மேரேஜ் டாக்குமெண்ட் கொண்டான்னார்."

சகுந்தலா சுதிரைப் பார்த்துச் சிரித்தாள்.

"அவரையும் விடல்லியா இவன்? என்ன உளறினே?"

தனக்கும் சரவணனுக்கும் நடந்த சம்பாஷணையை சுதிர் விவரித்தான்.

சகுந்தலா தலையில் அடித்துக் கொண்டு சிரித்தாள்.

"உன் இங்கிலீஷ் வேறே புரிந்திருக்காது!"

"ஆமாம். அந்த லேடி சொன்னார். நான் ஒரு வெள்ளைக்காரன் மாதிரி பேசுவதாக!"

"அவர்களுக்கு நீ சொன்னது கலாசார அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கும்."

அவள் மீண்டும் சிரித்தாள்.

"அவங்க ரெண்டு பேருடைய முகமும் போன போக்கைப் பார்க்க நான் அங்கே இருந்திருக்கணும்."

"சகுந்தலா! சிரிக்காதே. எனக்கு மண்டை வெடிச்சுடும் போல இருக்கு" என்றான் விவேக்.

சகுந்தலா கண்களைத் திரையிட்ட நீரை மறைக்க முகத்தைத் திருப்பித் தொலைவைப் பார்த்தாள். அவளுடைய பங்களிப்பு ஏதும் இல்லாமலே அவளுடைய வாழ்வு தறிகெட்டுப் போவதுபோலத் தோன்றிற்று. யாரோ



"குளிர் தாங்காமல் அருவியில் கையையும் காலையும் ஆட்டியபடி குளிச்சுக்கிட்டே, அந்தப் பொண் ஆமை மார்க் குளியல் சோப்பை ....."

"ஸ்..! அந்த மெகா தொடரின் நேற்றைய கதையை மட்டும் சொல்லு மீனா. இடையில் வர்ற விளம்பரமெல்லாம் சொல்லி போரடிக்காதே..!"

- உ. ராஜாஜி

எழுதுகிறார்கள் என் கதையை. எழுதும் அந்தக் கையைத் தடுக்கும் சக்தி எனக் கில்லை என்கிற சோர்வு அவளை ஆட் கொண்டது. சம்பந்தமில்லாமல் 'ரன்னவே ட்ரெயின்' என்கிற படம் நினைவுக்கு வந் தது. புகை வண்டி ஓட்டுனர் மாரடைப்பில் இறந்துவிட அதில் மாட்டிக் கொண்ட மூன்று பேர் தறிகெட்டு ஓடும் வண்டியை நிறுத்தும் வழி தெரியாமல் திகைக்கிறார்கள். அதில் இருவர் சிறையிலிருந்து தப்பித்த கைதிகள். மூன்றாவது ஓர் இளம் நங்கை. கைதிகளில் வயதானவன் தன் உயிரைப் பணயம் வைத்து எஞ்சினை விடுவித்து இளைஞர்களைப் பிழைக்க வைக்கிறான். கறுப்பு வெள்ளைப் படம். உறையும் பனிக்காடுகளில் விரையும் ரயில் வண்டி. இளைஞர்களிடையே மலர்ந்த காதலை உணர்ந்து பெரியவன் செய்யும் தியாகம். ஒன்று வாழ ஒன்று உயிர் துறக்க வேண்டும். சாதனைகளுக்குத் தியாகங்கள் தேவைப்படும். தியாகங்களுக்கு மயிரிழை மனித நேயம்...

''என்ன வேடிக்கை தெரியுமோ?'' என்றான் விவேக். "எதையெல்லாம் அவன் முன்பு நிராகரிச்சானோ, அதெல்லாம் இப்பத் தேவைப்படுகிறது. இஸ்ன்ட் இட் ஃபன்னி!"

"ஷுஅர்!" என்று கதிர் தலையசைத்தான். "டாம் ஃபன்னி. ஆனால் அது ரசிக்கும் படியாக இல்லை. இப்ப சினேகாவுக்கு பயம் பிடித்துவிட்டது. ரெஜிஸ்டர் கல்யாணம் பண்ணிக்கணும்னு சொல்ல ஆரம் பிச்சுட்டா."

சகுந்தலா பதில் ஏதும் சொல்லாமல், நகரும், உட்கார்ந்திருக்கும் கூட்டத்தைப் பார்த்தாள். தன்னைப் போன்ற இக்கட்டில் மாட்டிக் கொண்டவர்கள் யாராவது இருப்பார்களா என்று யோசித்தாள். நிர் வாண நாட்டில் நாம் உடை உடுத்துபவர்கள் என்று ராஜா சிரிப்பான். அல்லது போலிகள் நடுவில் நிஜம். நிர்வாணமாக நிற்பது யார் என்று அவளுக்கு இப்போது குழப்ப மேற்பட்டது. போலி எது நிஜம் எது என்று குழப்பமேற்பட்டது. ராஜா பேசும்போது அவன் பேசும் ஒவ்வொரு அட்சரமும் லட்சம் பெறும் என்று தோன்றும். ஜே. கிருஷ்ணமூர்த்தியும் ரஸ்ஸலும், ஸார்த்தும், காப்ராவும், மிலன்குன்தராவும், பாப்லோ நெருடாவும் அவனுள் புகுந்து ஒரு தனித் துவக் குரல் எழுப்புவார்கள். காலங் காலமாக உன்னுள் பதிந்து, சிந்தையைக் குழப்பும் நினைவுப் படிமங்களிலிருந்து உன்னை முழுமையாக விடுவித்துக்கொள். போலிகள் விலகும் - நிஜத்தை உணர்வாய்-

"சக்கு - நம் உறவு போலி இல்லை - நிஜம்" மனித உறவுகளிலேயே நம்பிக்கை இழந்திருந்த நேரம் அது -

"பதிவுத் திருமணமா? 'வேண்டாம் - தேவையற்ற ஓர் ஆவணம் அது. யாரும் எதற் கும் நமது உறவை நிரூபிக்க அதைக் கேட்கப் போவதில்லை. அதைக் கொண்டுவா, அப்பத்தான் வேலை கிடைக்கும். அப்பத் தான் ரயில் டிக்கெட் கிடைக்கும். ரேஷன் கார்டு கிடைக்கும்னு யாரும் கேட்கப் போறதில்லே. எனக்குப் பிறகு என் எல்லா உடமைகளும் சக்குவுக்குன்னு வேணா ஒரு உயில் எழுதி வைக்கிறேன்!"

உட்காரக்கூட நாற்காலி கட்டில் எதுவு மில்லாத அந்தக் காலி மனையின் தரையில் உட்கார்ந்து அவன் அவள் கையில் அடித்து சத்தியம் செய்தபோது ஆகாசம் பூமிக்கு இறங்கியிருந்தது. சுவர்க்கம் அவள் மடியில் கிடந்தது.

ராஜாவின் பேச்சுக்கும் பார்வைக்கும் சிரிப்புக்கும் அப்படி ஒரு சக்தி இருந்தது. பரஸ்பர நம்பிக்கை இல்லாதவர்களுக்குதான் சட்டப் பாதுகாப்பு என்று அவன் சொன்ன தில் நியாயம் தெரிந்தது.

அவள் தன்னையறியாமல் தன் உள்ளங் கையை விரித்துப் பார்த்தாள். அவனது ஸ்பர்சத்தின் கதகதப்பு இன்னும் இருந்தது. "உனக்கு ஒரு வழி பண்ணாமலேயே நா போயிடுவேன் போலிருக்கு" என்று புலம்பிய பாட்டியின் நினைவு வந்தது. வழி பண்ண ணும்னா என்ன பாட்டி? ''ஒருத்தன்

கையிலே ஒப்படைச்சேன்னா நிம்மதியா போவேண்டி." பாட்டிக்கு அது சாத்தியப் படவில்லை. ராஜா அவள் கையைப் பற்றிய தருணத்தில் தன்னையே ஒப்படைத்துக் கொண்டதாக உணர்ந்தபோது பாட்டி இருக்கவில்லை. பாட்டி உயிருடன் இருந் திருந்தால் அவளுடைய சிந்தனையையும் ராஜா மாற்றியிருக்கக் கூடும். "ஆமாம், ஜாத கம் பார்த்து, பொருத்தம் பார்த்து அக்னி வலம் வந்து பண்ண கல்யாணமெல்லாம் நிலைச்சிருக்கும்னு இனிமே சொல்ல முடியுமோ?" என்றிருப்பாள். பாட்டியின் இரண்டாவது மகனுக்கு அப்படி அவள் செய்து வைத்த கல்யாணம் ஒரே மாதத்தில் முறிந்தது. மாமி, தன் காதலனுடன் ஓடி விட்டாள். மாமாவுக்குப் பாட்டிமேல் ஏற் பட்ட தீராத கோபத்தில் உறவையே அறுத்துக் கொண்டு போனார். பம்பாயில் ஒரு முஸ்லிம் பெண்ணோடு வாழ்வதாகக் கேள்வி.

"எதுக்குமே அர்த்தமில்லாம போச்சு பாத்தியோ?" என்று பாட்டி சில சமயம் தனக்குள் விடையைத் தேடியது அவளுக்குத் தெரியும்.

அவள் விவேக்கைப் பார்த்து மெல்லிய குரலில் சொன்னாள்.

"எதுக்குமே அர்த்தமில்லாம போச்சு விவேக்! நிஜமெல்லாம் பொய்யாப் போச்சு!"

"நம்ம பக்கம் பலவீனமாப் போனது போல தோற்றம் அளிக்கிறதுதான் எனக்குக் கஷ்டமாயிருக்கு சக்கு!" என்றான் அவன் யோசனையுடன்.

சுதிர் குழந்தையிடமிருந்த கவனத்தைத் திருப்பி அவனைத் தீவிரமாகக் கேட்டான்.

"நம்மகிட்ட நிரூபணங்கள் இருந்தா நம்ம பக்கம் பலமா இருக்கும்னு நம்பறியா?"

சகுந்தலா ஆயாசத்துடன் தலையசைத் தாள். "நான் நம்பல்லே" என்றாள். "போட்டோவையும் டாக்குமென்டையும் காட்டி அவனை அழைச்சு வந்தா கட் டாயத்துக்கு உட்பட்ட மாதிரி, சட்டத் துக்குப் பயந்து வந்த மாதிரி தோணும் - மறுபடி காதல் மலரலாம்னு டாக்டர் சொன்னாரே, அது நேராமலே போகும். இப்படியெல்லாம் அவனைக் கட்டாயப் படுத்தறது எனக்கு சரின்னு தோணல்லே. அவமானமாக்கூட தோணறது. உன் குழந்தைதான் இது, குழந்தைக்கு தகப்பன்னு கையெழுத்துப் போட்டிருக்கே பாருன்னு ஆஸ்பத்திரி சீட்டைக் கூட நான் காண்பிக்க விரும்பல்லே. டிஎன்.ஏ. டெஸ்டைப் பத்திப் பேசவே எனக்குக் கூசுகிறது."

"பின்னே, என்ன செய்யலாம்னு நினைக் கிறே?" என்ற சுதிரை அவள் யோசனை யுடன் பார்த்தாள். தன்னைப் பைத்தியக்காரி என்று இவன் நினைப்பான் என்ற உணர்வுடன் சொன்னாள்.

"ஒண்ணும் செய்ய வேண்டாம். அவ னுக்கு நினைவு திரும்பும். எங்கிட்டத் திரும்பி வராம எங்கே போவான்?"

விவேக்கும் சுதீரும் ஒருவரையொருவர்

ஓடிக்கா தங்கம்!



பார்வையிலேயே இவளுக்குக் கிறுக்குத்தான் என்று சொல்லிக் கொள்வதை அவள் கவனித்தாள். "நம்பிக்கை வையுங்கள் பெஹன்" என்று அன்று மிஸஸ் மல் ஹோத்ரா சொன்னபோது தனக்கும் இப்படித்தான் சோர்வேற்பட்டது என்று நினைவு வந்தது.

"கமான்" என்றான் சுதிர். "ப்ராக் டிகலா யோசிக்கணும் சக்கு. அந்த ஆஸ் பத்திரி சீட்டை எங்கக்கிட்ட குடு. அதை அவன்கிட்ட காட்ட வேண்டியது அவ சியம்."

சகுந்தலா பதில் சொல்லாமல் தன்னுள் மூழ்கிய யோசனையுடன் தொலைவைப் பார்த்தாள். மோக்ரா விற்கும் சிறுமி தன் னிடம் மிச்சமிருந்த ஒரே ஒரு சரத்தை ஒரு வெள்ளைக்காரியிடம் நீட்டிக் கொண் டிருந்தாள். வெள்ளைக்காரி அதை வாங்கிக் கழுத்தில் மாட்டிக் கொண்டாள். சகுந்தலை

யைப் போல.

சகுந்தலா திரும்பி அவர்களைப் பார்த்துச் சிரித்தாள்.

"புராணத்திலே வர்ற சகுந்தலை மாதிரி பரத்தைத் தூக்கிண்டுபோய் அவன் எதிரிலே நின்னா என்னன்னு யோசிக்கிறேன். சகுந்தலை ஒரே வரியிலே தன் சரித்திரத்தைத் தெரிவித்தாள் - 'மகனே உன் தந்தைக்கு வணக்கம் சொல்' பரத்துக்கு அவனுடைய அப்பா மூஞ்சி மறந்திருக்காதுன்னு நினைக்கிறேன்."

**சமீபத்தில் பெங்களூரில் அகில இந்திய அளவில், முதியோர்களுக்கான விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன. இரண்டாயிரத்து ஐந்நூறு வீரர்கள் கலந்து கொண்ட இப்போட்டியில் ஒட்டு மொத்த சாம்பியன் ஷிப் கேடயத்தைப் பெற்று, தமிழ்நாடு சிறந்த மாநிலமாகத் தேர்வு பெற்றுத் திரும்பியுள்ளது.**

**திருவாரூர், மருதுவஞ்சேரி கிராமத்தைச் சேர்ந்த பாலாம்பாள், தடகளப் போட்டிகளிலும், உயரம் தாண்டும் போட்டியிலும் பங்கேற்று, அகில இந்திய அளவில் மூன்று தங்க மெடல்களைப் பெற்று ஜொலிக்கிறார். அவருக்கு வயது ஜஸ்ட் ஃபிப்டி!**

**படம், தகவல் : இருள்நீக்கியான்**

"அது நல்ல ஐடியாதான்" என்றான் கதிர்.

"ராஜா இரண்டு நாள் டைம் கேட்டிருக்கிறான். டாக்டரும் அதற்கு, சரி என்று சொல்லியிருக்கிறார்" என்று விவேக் தயங்கினான்.

"ஃபைன்!" என்றாள் சகுந்தலா. "நாளை மறுநாள் அங்கே போய் நிக்கறேன்."

"குட்! ஆல் தி பெஸ்ட்!" என்று விவேக் புன்னகைத்தான். "குழந்தை அவனுடைய நினைவலைகளைப் போய்த் தாக்கட்டும். நினைவு வருதோ இல்லையோ தனக்குப் பொறுப்பு இருக்குங்கறதைப் புரிஞ்சுக்கட்டும்."

"சக்கு டெல் மீ, புராணக் கதைலே என்ன ஆச்சு? சகுந்தலை அப்படிச் சொன்னதும்?" என்றான் கதிர்.

"நீ யாருன்னே எனக்குத் தெரியாது. எனக்குப் பிறந்த குழந்தையா இது இருக்க முடியாதுன்னு துஷ்யந்தன் ஒரேயடியா சாதிக்கிறான்!"

"ஏன், அவனுக்கும் மறதியா?"

"இல்லே, புளுகறான்."

"என்ன சொல்றே நீ?" என்றான் விவேக். "அவன் ஏதோ சாபத்தினாலே மறந்துட்டான்னு வராது?"

"அது காளிதாசனுடைய கற்பனை. கதையை மாத்திட்டான். ஒரு ஆண்பிள்ளை தெரிஞ்சே அயோக்கியத்தனம் செஞ்சான்னு இருக்கக் கூடாதுன்னு. ஒரிஜினல் மகாபாரதக் கதையிலே, அவனுக்கு மறதி ஒண்ணும் இல்லே. திடீர்னு அவ குழந்தையோட தன் சபைக்கு வந்து நின்னப்ப, மந்திரிகள் என்ன நினைப்பார்களோன்னு துஷ்யந்தன் புளுகறான். அப்புறம் சபையிலே இருக்கிறவங்களுக்குக் கேட்கற மாதிரி அந்தக் குழந்தை உன்னுடையது ஏற்றுக் கொள்னு வானத்திலேருந்து தேவதைகள் சொன்னப்புறம் ஏத்துக்கறான்."

"எனக்குத் தெரியாது இந்தக் கதை. காளிதாசன் கதை தெரியும். மோதிரம்தான் விட்னஸ்னு வரும் கடைசியிலே."

"ரோமிலா தாப்பர் புத்தகத்திலே வருது மகாபாரதக் கதையைப் பத்தி. சகுந்தலா அதிலே ரொம்ப ஸ்ட்ராங் காரக்டர். அவள் வாழ்ந்த காலத்துக்கு ஏத்தபடி, காளிதாசன் அவளை வெறும் பொம்மையாக்கிட்டான் என்கிறதை ரோமிலா விளக்கியிருக்கா."

கதிர் புன்னகைத்துக் கேட்டான். "நீ மகாபாரத சகுந்தலையா, காளிதாசன் சகுந்தலையா?"

சகுந்தலா சிரித்தாள். "நான் ஒரிஜினல். ஆனா எனக்கும் தேவதைகள் உதவி தேவை."

விவேக் சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்தான்.

"உன் மகாபாரதக் கதையைக் கேட்டதும் என்னவெல்லாமோ நினைக்கத் தோணுது சக்கு!"

சகுந்தலா அவனை ஆழமாகப் பார்த்துவிட்டு பரத்தைத் தூக்கி, ப்ராம் வண்டியில் அமர்த்தி பெல்டை மாட்டினாள்.

"ராஜா புளுகல்லே விவேக்" என்றாள் நிதானமாக.

"ஆனா துஷ்யந்தன் மாதிரி ஒரு சபையோட அங்கீகாரம் அவனுக்குத் தேவை."

"நீங்கள் இருவரும் என்ன பேசுகிறீர்கள் என்றே புரியவில்லை" என்றான் கதிர்.

(தொடரும்)



# தினந்தோறும் சித்ரவதை

**ப**க்கத்து வீட்டுக்காரர் நல்லவராக அமைவதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்பார்கள்.

டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை நான்காவது தெருவில் இருக்கும் நாராயணபிள்ளைக்கு, அந்தக் கொடுப்பினை இல்லை. எழுபத்தாறு வயதான மனிதரின் சருமத்தை, அடுத்த வீட்டிலுள்ள சேலை பாலீஷிங் மற்றும் ப்ரிண்ட்டிங் தொழிலகத்திலிருந்து வீசும் வெப்பக் கதிர்கள் அப்படியே அரித்து, உரித்து வருகின்றன.

'தி ஹிந்து'வில் இவரது கடிதம் இரண்டு வருடங்களுக்கு முன் வெளியானபோது, தாற்காலிகமாக நிவாரணம் கிடைத்தாலும், சிறிய இடைவெளிக்குப் பிறகு மறுபடியும் தொழிலைத் தொடங்கி விட்டார் உரிமையாளர்! குடியிருப்புப் பகுதியில் இப்படி ஒரு தொழிற்சாலை நடத்த வேண்டுமானால், பார்ட்டி பவுர்ஃபுல்லாகத்தானே இருப்பார்?

**த**மிழ்நாடு மாசுக்கட்டுப்பாடு வாரியம் 78.98ல், மேற்படி தொழிற்சாலைக்கு மின் சாரத்தைத் துண்டித்து விடச் சொல்லி, மின் வாரியத்துக்கு ஆணை அனுப்பியது. சென்னை மாநகராட்சி கமிஷனருக்கும், மாவட்ட கலெக்டருக்கும் நகலையும் அனுப்பி வைத்தது.

பலன் ஏதும் இல்லாமல் போகவே, சமீபத்தில் காலமான சுற்றுச்சூழல்வாதி அனில் அகர்வால் சென்னை வந்திருந்த போது, தம்முடைய அவதியைச் சொல்லி அழுதார் நாராயண பிள்ளை. அவர் முயற்சியால் மறுபடி தாற்காலிக நிறுத்தம் செய்ய முடிந்தது.

தமது முறையீட்டுக் கடிதம் செய்தித்தாள்களில் வெளியாகும்போதெல்லாம் அடுத்த வீட்டிலிருந்து 'அர்ச்சனை' கிடைக்கும் என்கிறார் நாராயணபிள்ளை!

முன்னாள் முதல்வரின் ஆட்சியில் தமக்கு நியாயம் கிடைக்காமல் போகவே, இந்நாள் முதல்வருக்கு 26.6.2001லும் 30.5.2002லும் கடிதங்கள் எழுதியிருக்கிறார் நாராயண பிள்ளை. ஓர் அதிகாரி இவருடைய உலை போன்ற படுக்கையறையைப் பார்வையிட்டுச் சென்றிருக்கிறார். பலன் ஏதும் கிடைக்குமா என்று தெரியவில்லை.

தமது வாழ்நாளின் கடைசி காலத்தில் இருக்கும் நாராயண பிள்ளை, ஒவ்வொரு விநாடியும் பொரிக்கும் உஷ்ணத்தின் சித்திரவதையில் நாட்களைக் கடத்திக் கொண்டிருக்கிறார்.

இதற்கு விடிவு உண்டா என்று கன்னத்தில் கை வைத்துக் காத்திருக்கிறார்.

— சித்தார்த்

# மாருத்தூறலுக்குத் தடை!!

## தர்மபிரபு!

* சில்லறை காசுகளை
கமிஷனுக்கு
விற்பனை செய்யும்
பிச்சைக்கார பிரபுக்கள்!

## விலைவாசி...

* இரண்டு கார்டுகளின்
எழுத்துச்சுமை
ஒரு கார்டின் தலைமேல்!

* கோடையில் தினந்தோறும்
பகீரதனின்
நினைவுநாள்!

* எரிக்கும்
சூரியனுக்காக
உருகுவது ஏன்?
— தார்சாலை

- குடியாத்தம் குணாளன்

## ருசி!

தேனும் கசக்கிறது -
அரசியல் பற்றி
பேசிவிட்டுச்
சுவைத்தால்!

- தங்கவயல் பழனி

## சிகரம்

உன்னையே
நீ அறி
தொட்டுவிடும் தூரம்
என்பதும்
தொலைதூரம்
என்பதும்
பொய்
உனக்குள்தான்
இருக்கிறது
சிகரம்.

— இரா. நாகராஜன், திருவையாறு

* காற்றுப் புகாக் கிடங்கில்
நூற்றுக்கணக்காய்ப் பெட்டிகள்
ஏற்றுமதிக்காக மின் விசிறிகள்!

* அலாரம் வைத்து, அலறிப் புடைத்து
அம்மா, அப்பா, பாட்டி, தாத்தா ரெடி
அனிலுக்கு இன்று
முதல் எல்.கே.ஜி!



* கவிதை ஆய்வு -
விமரிசனக் கூட்டம்
மேடையில் எட்டு பேர்,
கீழே நாலு பேர்,
படைப்பாளிகள்
பெருகியுள்ளனர்.

* வரவேற்பு
வளையங்கள்,
வழி நெடுகப் பந்தல் -
ஹெலிகாப்டரில்
அமைச்சர் வந்திறங்க,
குடிசைத் தொழில்
துவக்க விழா!

- வீ. விஜயராகவன்



## சோம்பல்

* ரிமோட்டை
எடுத்துத் தர தேவை
ஒரு ரோபோ!

## மனசு

* நாய் விற்ற காசு
குரைக்காது
கோழி விற்ற காசு
கூவாது
என்றெல்லாம்
அவையில்
அலங்காரமாக
உரையாற்றிவிட்டு
வெளியே வந்தவன்
வெகுவாகத் தயங்கினான்
விதவையிடம்
பூ வாங்க!

- ஆர். ரகோத்தமன்

## இட ஒதுக்கீடு!

* பெரிய பிள்ளை
ஃபிரான்ஸில்
அடுத்த பிள்ளை
அமெரிக்காவில்
கடைசி பிள்ளை
கனடாவில்
பெற்றோர் நாங்கள்
முதியோர் இல்லத்தில்...

- வல்லம் தாஜுபால்

## ரசனை!

* வாட்டர் தீம் பார்க்கில்
பணங் கொடுத்து
நனைந்தவர்
வானத் தூறலுக்கு
விரிக்கிறார்
குடைகளை...!

## முரண்

* விலை அதிகம்தான்
'ஆசை'யில்
வாங்கி வந்தேன்...
அழகு புத்தர் சிலை...!!

- பாளை பசும்பொன்

உலகப் பட விழாவில் கலந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது எனக்கு. அதன் பொருட்டு தில்லி சென்றேன். (பிறகு படவிழா பற்றிக் கதிரில் ஒரு தொடர் எழுதினேன்.) ஒரு நாளைக்கு ஆறு படங்கள் வீதம் பதினைந்து நாளில் தொண்ணூறு படங்கள். ஒவ்வொன்றும் உலக மொழிகள் ஒவ்வொன்றிலிருந்தும் தேர்வு செய்யப்பட்ட திரை அற்புதங்கள். மனிதனைச் சிந்தனையில் ஆழ்த்தி மேன்மைப்படுத்தும் அமர காவியங்கள். மசாலா தமிழ் சினிமாக்களைப் பார்த்து சினிமா என்ற கலையையே வெறுப்பவர்கள் உண்டு. நெருப்பு, விளக்கையும் ஏற்றும் வீட்டையும் கொளுத்தும் என்பது சினிமாவைப் பொறுத்தவரை மிகச் சரி.

படவிழாவில், தி. ஜானகிராமனின் அருகே அமர்ந்து படம் பார்க்கும் பாக்கியம் கிட்டியது. இடைவேளைகளில், படங்களின் உன்னதம் பற்றி அவர் பேச நான் கேட்ட அனுபவம் மறக்க முடியாதது. சாவி பத்திரிகை சார்பில் அவர் வந்திருந்தார். இடையே ஒருநாள் பொங்கல் பண்டிகை வர, தம் வீட்டுக்கு என்னை அழைத்தார். பொங்கல் விருந்தளித்து என் மனத்தில் மகிழ்ச்சி பொங்க வைத்தார். தி.ஜா.-இலக்கியத்தில் அவர் மனைவிக்கு இருந்த தேர்ச்சியைப் பார்த்து. கணவரின் முதல் ரசிகை அவர் தான் என்பதை நான் புரிந்து கொண்டதும் அப்போதுதான்.



• அலைகள் ஓய்வதில்லை

உலகப் படவிழா சரி. ஆனால் சராசரித் தமிழ்ப் படங்களைப் பார்ப்பது வாய்ப்பா, தண்டனையா? நான் சில ஆண்டுகள் சினிமா விமர்சகனாகவும் இயங்க நேர்ந்தது. நவீனன், பி.ஏ.தாஸ், கௌசிகன் (வாண்டு மாமா), அபர்ணாநாயுடு (சி.ஆர். கண்ணன்) எனக் கதிர் துணையாசிரியர்கள் பலரும் சினிமா விமர்சகர்களாகவும் இயங்கியவர்கள். நான் மட்டும் எப்படித் தப்ப முடியும்? எந்த சினிமா என்பது நம் தேர்வு கிடையாது. எதுவானாலும் போய்ப் பார்த்து விமர்சனம் எழுத வேண்டும். (சினிமா விமர்சனத்தில் சில புதுமைகளும் செய்யப்பட்டதுண்டு. திருவிளையாடல் பற்றி கிருபானந்த வாரியாரிடம் ஒரே ஒரு வரியில் கருத்துச் சொல்லுமாறு கேட்கப்பட்டது. "சிவாஜி நல்லமுறையில் சிவாஜியாக நடித்திருக்கிறார்!" என்று சொன்னார் அவர்!) நான் எழுதிய சில சினிமா விமர்சன வரிகள் இதோ:

● கதாநாயகனின் சகோதரி படம் ஆரம்பித்த கொஞ்ச நேரத்திலேயே பைத்தியம் பிடித்த நிலைக்கு ஆளாகிறாள். வெளிநாட்டிற்கு அனுப்பப்படுகிறாள். வெளிநாடு போனவளுக்கு என்ன ஆயிற்று? படம் முடியும் வரை தகவல் இல்லை. அவள் வெளிநாட்டிலேயே செட்டிலாகி இருக்கக் கூடும். இதுபோன்ற திரைப் படங்கள் வந்து கொண்டிருக்கும் சூழ்நிலையில் அவள் வேறு இந்தியா வந்து சிரமப்பட வேண்டுமா என்ன? (படம்: குரோதம்)

● ஒரு கோட்டு, ஒரு டை - எப்போது பார்த்தாலும் எங்கே பார்த்தாலும் எல்லாப் படத்திலும் கதாகருக்கு. கோட்டை விட்டால் வேறு டிரஸ்ஸே அகப்படாதா! (நடிப்பிலும் ஞாபகமாகக் கோட்டை விட்டு விடுகிறார்!) (படம்: பெண்ணின் வாழ்க்கை)

● ஏற்கெனவே கேள்விப்பட்ட நல்ல புதுக்கவிதைகள் நயமான வசனங்களாய், சாமர்த்தியமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. (நாங்கள் சேற்றில் கால் வைக்காவிட்டால், நீங்கள் சோற்றில் கை வைக்க முடியாது போன்றவை

## திருப்பூர் கிருஷ்ணன்

# சினிமா விமர்சனங்கள்...

உதாரணம்.) (படம்: சிவப்பு மல்லி)

● விகடனில் சுஜாதா எழுதிய கதை. படத்தில் மாறாமல் அப்படியே மிஞ்சி நிற்பது கவிதை நயம் சொட்டும் தலைப்பு மட்டுமே... ஜாலக்கும் புத்திசாலித் தனமும் நிறைந்த எழுத்தில் கொண்டு வரும் அழகு



* 'திருவிளையாடல்'

களைக் காமிராவில் கொண்டு வர முடியாது என்பதற்கு இந்தப் படம் உதாரணம். (படம்: கரையெல்லாம் செண்பகப்பூ)

● ஆடு திருடிய கள்ளன் மாதிரி அசட்டுத்தனம் தெரியும் விழி பிரதாப்பின் பிளஸ் பாயின்ட். கச்சிதமாக நடித்து விட்டார். ஆனால் அழத்தான் முடியவில்லை அவரால். அவர் அழும் காட்சிகளில் நமக்கும் அழுகை வருகிறது. உருக்கத்தால் அல்ல, அழ சிரமப்படுகிறாரே என்ற இரக்கத்தால். (படம்: மதுமலர்)

● மீசை கூட அரும்பாத சின்னஞ்சிறு பயல்கள் தமிழ் சினிமாக்களில் அதிகமே காதலிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். நர்சரி ஸ்கூல் சிறுவர்கள் காதலித்து தங்கள் காதலுக்காக வீட்டை விட்டு வெளியேற வேண்டியதுதான் பாக்கி! (படம்: அலைகள் ஓய்வதில்லை)

ஒவ்வொரு படத்திலும் பாராட்ட வேண்டியதைப் பாராட்டத்தான் செய்தேன். என்றாலும் நான் பாராட்டியதை விடவும் தாக்கியதுதான் பலர் கண்ணில் பட்டது. பெரும் முதலீடு செய்து எடுக்கப்படும் படத்தை ஆதரவுக் கண்ணோட்டத்தோடு தான் விமர்சிக்க வேண்டும் என்று ஒரு கட்சி. விமர்சனம் எழுதுவது சுலபம், சினிமா எடுத்துப் பார்த்தால் அல்லவா தெரியும் என்று இன்னொரு கட்சி.

இதனிடையே லாரி டிரைவர் ராஜாக்கண்ணு என்ற மோசமான சிவாஜி படத்துக்கு நான் எழுதிய விமர்சனம் எதிர்பாராத ஒரு பிரச்னையைத் தோற்றுவித்தது. 'இதில் கதை இருக்கிறது என்று எழுத நினைத்தால் என் பேனா சதை இருக்கிறது என்பதாகத்தான் எழுதுகிறது' எனத் தொடங்கி அதில் இடம் பெறும் இரட்டை அர்த்த வசனங்களைத் தாக்கி காரமாக ஒரு விமர்சனம் எழுதியிருந்தேன். விமர்சனம் வந்த இதழிலேயே, தயாரிப்பாளர்கள் படத்திற்கு முழுப்பக்க விளம்பரம் கொடுத்திருந்தார்கள்! விளம்பர வருவாயை வாங்கிக் கொண்டு இப்படித் தாக்குவது என்ன நியாயம் என்று என்னிடம் கேட்கப்பட்டது. விளம்பரத்திற்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்றும் என் மனச்சாட்சிக்கு விரோதமாக நான் எதையும் எழுத இயலாது என்றும் என்னை சினிமா விமர்சனத் துறையிலிருந்து விடுவித்தால் பெரும் உபகாரமாய் இருக்கும் என்றும் நான் பதில் அளித்தேன். அந்த உபகாரம் உடனே செய்யப்பட்டதில் நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

(தொடரும்)



• ஆல்பம்



• புஷ்பா கந்தசாமி



• ஞாபகங்கள் தாலாட்டும்

# “எனக்கு டெஸ்ட்”

தமிழ் சினிமாவில் கேமராவுக்குப் பின்னாலிருந்து சாதிக்கிற பெண்களை விரல் விட்டு எண்ணி விடலாம். அதிலும் பெண் தயாரிப்பாளர்கள் ரொம்ப ரொம்ப அபூர்வம், புஷ்பா கந்தசாமி போல.

புஷ்பா கந்தசாமி முதல்முறையாக தானே கதை கேட்டு, இரண்டு புது இயக்குனர்களை அறிமுகப்படுத்துறார். அதுவும் அப்பா பாலசந்தரின் எந்தத் தலையீடும் இல்லாமல்...

“எனக்கே இது ஒரு சுய பரிசோதனை தான். 'அழகி', 'காசி' போன்ற தரமான கதையம்சம் கொண்ட கதைகள் வெற்றிகரமா ஓடினதுலே எனக்கு ரொம்ப சந்தோஷம். நாமும் அது மாதிரி சினிமாத்தனம் இல்லாத கதைகளை முயற்சி செய்யலாமேனு நிறைய இளைஞர்கள்கிட்டே கதை கேட்க ஆரம்பிச்சேன். அப்படிக் கேட்ட கதைகளில் ஒரு ரசிகையாகவும், ஒரு தயாரிப்பாளராகவும் என்னை மிகவும் கவர்ந்த கதைகள்தான், 'ஞாபகங்கள் தாலாட்டும்', 'ஆல்பம்' படங்களாக உருவாகியுள்ளன'' என்கிறார் புஷ்பா கந்தசாமி.

சின்ன வயதில் ஊரை விட்டு ஓடிப் போனவன், இருபது வருஷத்துக்குப் பிறகு இளைஞனாக கிராமத்துக்குத் திரும்பி வருகிறான். அங்கே அவன் சந்திக்கிற மாற்றங்கள், அதையொட்டி கிடைக்கும் அனுபவங்கள்தான் 'ஞாபகங்கள் தாலாட்டும்'. ஊருக்குத் திரும்பி வர்ற இளைஞனாக முரளி பண்றார். நிறைய படங்களுக்கு உரையாடல் எழுதியிருக்கும் நகுலன் பொன்னுசாமிதான் படத்தை இயக்குகிறார். இந்தப் படம் நிஜமான மண்வாசனையோடு வித்தியாசமா இருக்குமாம்.

“'ஆல்பம்' ஒரு குடும்பத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளின் ஃபோட்டோ கலெக்ஷனாக இருக்கும். படத்தில் நிறைய வாண்டுகள் இருக்காங்க. ஸ்ருதிகா, ஆரியன் ராஜேஷ் போன்ற புதுமுகங்களுடன் சரிதா, மலையாளத்திலிருந்து பாலச்சந்திரமேனன் என்று நடிப்பில் தூள் கிளப்புகிற ஆட்கள் இருக்காங்க. வசந்த பாலன் இயக்குகிறார்'' என்றார் புஷ்பா கந்தசாமி.

— ஜெய்

# பட்டத்து ராணி!

எந்த நேரத்திலும் மழை வந்து விடலாம் என்ற தோரணையோடு கார் மேகங்கள், பார்வையாளர்களை மிரட்டிக்கொண்டிருந்த ஏழரை மணி இரவு. அருள்மொழி வர்மனும், வந்தியத்தேவனும் குதிரை குளம்பொலிகளுக்கு நடுவே வந்து உயிரோடு நடமாடி விட்டுப் போன அதே ஒய்.எம்.சி.ஏ திறந்தவெளி அரங்கம். இந்த முறை ஷேக்ஸ்பியரின் ரிச்சர்டு மூன்றாம் மன்னன். தமிழ்ச் சூழலுக்கு மாறவர்மனாக மாறியிருக்க, அவன் கரங்களில் பளபளக்கும் பட்டாக்கத்தி. எதிரில் நிற்கும் அன்னாவிடம் "எனக்கு ராணியாகி விடு" என்று மிரட்ட, அன்னாவோ தமிழில் தாமரையாகி, திமிர்த் தெறிக்க நிமர்ந்து நிற்கிறாள். அவளது கண்களில் அதே பட்டாக் கத்தியின் பளபளப்பு





ஆணவமாய்ப் பிரதிபலிக்க, "அதற்கு வேறு ஆளைப்பார்" என்பதுபோல கூர்மையான செந்தமிழ் வசனங்களால் அவனைப் பதம் பார்க்கிறாள், பார் ஆளும் மன்னன் என்ற பயம் கொஞ்சமும் இல்லாமல்.

அட! யார் இந்த நடிகை என்று புருவம் உயர்த்தி, ஆச்சர்யப்பட்டு கை தட்டி பாராட்டுகிறார்கள். உற்சாகத்தில் தாமரையாகவே மாறிப் போகிறார் அந்த நடிகை. கூத்துப் பட்டறையில் தொடங்கி மேஜிக் லேண்டர்ன் வரையிலும் தொடரும் பசுபதி, ஜெயக்குமார் போன்ற அசகாய நடிகர்களுக்கு ஈடு கொடுத்து 'பட்டம்' நாடகத்தில் எல்லோரது கவனத்தையும் திசை திருப்பிய ராணி தாமரையின் நிஜப் பெயர் 'தித்லி'

''ஹிந்தியில் 'தித்லி' என்றால் வண்ணத்துப் பூச்சி என்று அர்த்தம். அப்

பாவுக்குப் பிடித்த பெயர்" என்று அகலமான கண்களை உருட்டிப் பேசிய, தித்லி சென்னையில் கம்ப்யூட்டர் ப்ரோகிராமராக வேலை செய்கிறார்.

"எனது சகோதரி மேஜிக்லேண்டர்ன் குழுவில் இருக்கிறார். அவர்கள் நடத்தி வரும் நடிப்புப் பயிற்சியை ஒருமுறை வேடிக்கை பார்க்கப் போயிருந்தேன். நடிப்புக்குப் பின்னால் எவ்வளவு விஷயங்கள் இருக்கிறது என்று வியந்து போனேன்.

# கல்கி
## VBC Jewellery
இணைந்து வழங்கும்

## புன்னகை போட்டி : 21 முடிவு

'ரமணா' படத்துக்கு ஏற்ற நச் டயலாக் எழுதச் சொல்லிக் கேட்டிருந்தோம். வசன மழையில் நனைந்தவாறே, இரண்டு பஞ்சிங் விஜயகாந்த் வசனங்களைத் தேர்வு செய்திருக்கிறோம். தலா நான்கு கிராம் பரிசு பெறும் இரண்டு கற்பனை வசனங்கள்:

**"ரமணா ஒரு ரன்னிங்மேன் மட்டுமில்ல, எப்பவுமே அவனொரு வின்னிங் மேன்."**

**மு. முன்னரசன், ஐவேலி தெரு, வேலம்புதுக்குடி போஸ்ட், தரங்கம்பாடி, நாகை மாவட்டம் - 609306**

**"நல்லவங்களுக்காக வருவான் ரமணா... எதிரிகளுக்கு வருவான் எமனா...!"**

**பா. கார்த்திகேயன், 75/34, மேற்கு ஜோன்ஸ் ரோடு, மேற்கு சைதை, சென்னை - 15.**

நானும் அங்கே சேர்ந்தேன். கேமிரா முன்பு நடிப்பதற்கும், மேடையில் நடிப்பதற்கும் எத்தனை வேறுபாடு என்பதை உணர்ந்து ஆச்சரியப்பட்டேன். நடிப்புப் பயிற்சியின் ஓர் அங்கமாக களரிப்பயட்டு, சிலம்பம் எல்லாம் கற்றுக் கொடுத்ததில் உடல் பலம் கிடைத்தது. பிறகு மனபலம் தானாக வந்தது. இடையில் மேஜிக் லேண்டர்னின் பொன்னியின் செல்வனைப் பார்த்தபோது என்னால் நம்பவே முடியவில்லை. மேடையில் இப்படியொரு நாடகத்தைப் படைக்க முடியுமா? என்று அப்போதுதான் மேடை நடிப்பு மீது முதல்முறையாக அதீத காதல் வந்தது. 'பட்டம்' நாடகத்தில் நடிக்கும் வாய்ப்பைக் கேட்டுப் பெற்றேன். முதலில் புதுவை ஆரோவில் நகருக்கு உட்பட்ட மூன்று கிராமங்களில், தெரு நாடகமாக இதை நிகழ்த்திக் காட்டினோம். தெரு நாடக நிகழ்வின்போது நடிகையாகவும் பார்வையாளராகவும் மாறி மாறி இருந்ததில் நிறைய கற்றுக் கொண்டேன். இந்த அனுபவத்தால் மேடை பயமும் அறவே போய்விட்டது! தவிர மேஜிக் லேண்டர்ன் குழு ஒரு குடும்பம் மாதிரி. எல்லோரும் போட்டி போட்டுக் கொண்டு சொல்லித் தருவார்கள்" என்கிறார்.

தித்லிக்குத் தாய்மொழி தெலுங்கு. அதனாலோ என்னவோ பேச்சுத் தமிழில் தெலுங்கு வாசனை அதிகம். தவிர துளிகூட தமிழ் எழுதப் படிக்கத் தெரியாது என்கிறார். கடவுளே! பிறகெப்படி பக்கம் பக்கமாய் செந்தமிழ் வசனங்கள் பேசி அசத்துகிறார்? "ஆங்கிலத்தில் எழுதி வாசித்து, உச்சரிப்பைக் கற்றுப் பேசினேன்" என்கிறார் கூலாக. பாலசந்தர், நாஸர், மணிரத்தினம், அகத்தியன் போன்ற ஏகப்பட்ட திரையுலக ஜாம்பவான்கள் 'பட்டத்தைப் பார்த்திருக்கிறார்களே, நடிக்கக் கூப்பிட்டால் 'ஓகே' சொல்லி விடுவீர்களா என்றால் "அய்யய்யோ' டீவி சீரியலில் நடிக்கக்கூட விருப்பமில்லை. எனது துறை கம்ப்யூட்டர். ஆத்ம திருப்திக்கு நாடகம்... '' அவ்வளவுதான்'' என்கிறார்.

'பட்டத்து' ராணியாக வெற்றிகரமாகக் களம் கண்டிருக்கும் தித்லி, இதுவரை ஷேக்ஸ்பியரின் மூன்றாம் ரிச்சர்டு நாடகத்தைப் படித்ததில்லையாம்! அட! இது மேட்டர்!

சந்திப்பு: **ஆர்.சி.ஜெயந்தன்**
அட்டை, படங்கள்: - **கே. சண்முகம்**

"மங்களூரில் எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த வருடம்... கோடை விடுமுறை வந்தது. மூன்று மாத காலம் சென்னையில் வந்து தங்கி விட்டேன். தினமும் வகுப்புகள் எடுத்தார் என் குரு. எப்போதடா பள்ளி படிப்பு முடியும் என்று காத்திருந்து, அப்பாவிடம் சொல்லி, சென்னை கல்லூரியில் அட்மிஷன் வாங்கிக்கொண்டு இங்கேயே ஹாஸ்டலில் தங்கிவிட்டேன். தினமும் நாலு மணி நேரம் வகுப்பு நடக்கும். ரொம்ப ஆனந்தமாயிருக்கும்..." என்கிறார் பிரார்த்தனா.

சமீபத்தில் காலமான சங்கீத கலாநிதி



மணி கிருஷ்ணசாமியின் மாணவி பிரார்த்தனா.

"உடம்பு சரியில்லையென்றால் கூட வகுப்பை நிறுத்த மாட்டார். கடந்த அக்டோபரில் அவரே என்னை அழைத்துப் போய் செங்கல்பட்டு ரங்கநாதனிடம் சேர்த்து விட்டார். நிரவலில் அவரிடம் பயிற்சி எடுத்துக் கொள்ளச் சொன்னார். பாட்டு விஷயத்தில் ரொம்ப கண்டிப்பாய் இருப்பார்; ஆனால் அதே சமயம் தனிப்பட்ட அக்கறையோடு ஒரு தாயைப் போல கவனித்துக் கொள்வார்... " பிரார்த்தனாவின் குரலில் பிரிவாற்றாமை சேர்ந்து ஒலிக்கிறது.

மணி கிருஷ்ணசாமியின் மற்றொரு மாணவி பத்மா கிருஷ்ணன். "ராகம், ஸ்வரம் பாடும்போது நிறைய உரிமை எடுத்துக்க அனுமதிப்பார். ஆனால் கீர்த்தனைகளை இம்மி மாறாமல் அப்படியே பாடணும். இல்லாவிட்டால் விடவே மாட்டார். உழைச்சுப் பாடணும். நுனிப்புல் மேயறதையெல்லாம் ஒப்புக் கொள்ளவே மாட்டார்.

"இத்தனைக் கண்டிப்பு இருந்தாலும் ரொம்ப கட்டுப்பாடோட வாழ்ந்தாலும் சட்டுன்னு டென்ஷனாயிட மாட்டார்.

"ஒருமுறை தென் ஆப்பிரிக்காவில பதினைஞ்சு கச்சேரி முடிச்சுட்டு மும்பை திரும்பறோம். மும்பையிலேருந்து உடனே டெல்லி போய் அங்கே ஆந்திர பவனில் ஆளுனர் தலைமையில் நடக்கவிருந்த விழாவிலே அம்மா விருது வாங்கணும். டெல்லியில் மூடுபனி; தரையிறங்க முடியவில்லை! மும்பை விமானம் டெல்லிக்குப் பதிலாக ஜெய்ப்பூர் போய்விட்டது.

# மணிக்குரல்!

"எங்களுக்கு ஒரே பதைபதைப்பு. அவர் கொஞ்சமாவது பதற்றப்பட வேண்டுமே...ஊஹூம். சுமார் மூன்றரை மணி நேரம் ஜெய்ப்பூரில் பிரார்த்தனை செய்தபடி உட்கார்ந்திருந்தார். அப்புறம் விமானம் புறப்பட்டு டெல்லி போய்ச் சேர்ந்தது. விழா தொடங்கும் நேரத்துக்குச் சரியாய்ப் போய்ச் சேர்ந்தோம். துளியும் டென்ஷன் இன்றி ஒன்றரை நேரம் கச்சேரியும் செய்தார்" என்கிறார் பத்மா.

மணி கிருஷ்ணசாமியின் சங்கீதம் அமைதியானது. அதே அமைதியுடன் அவர் இவ்வுலகிலிருந்து விடைபெற்றிருக்கிறார். அவரது இசையின் ரீங்காரம் அவருடைய சிஷ்யர்களின் மணிக்குரலில் தொடர வேண்டும்.

— சாருகேசி

# வாழவைக்கும் வடபழனியாண்டி!

குருஜி ஏ.எஸ். ராகவன்

கோடலம் என்றால் காந்தள் மலர். காந்தள் மலர்கள் நிறைய பூத்துக் குலுங்கிய பகுதி கோடலம்பாக்கம். இப்பெயர்தான் பிற்பாடு மருவி கோடம்பாக்கம் என்று ஆயிற்று. கோடம்பாக்கத்துக்கு இன்று திரையுலகத் தொடர்பினால் ஏற்பட்டுள்ள புகழைக் காட்டிலும் மிகப் பழையது தமிழ் முருகன் தேடித்தந்த புகழ்! குழந்தையாக, மகனாக, ஆண்டியாக, வேடனாக, கிழவனாக, காதலனாக, தந்தைக்கு உபதேசம் செய்த குருவாக, கவிகள் மெச்சும் தமிழ்க் கடவுளாக அவன் ஏற்ற ஒவ்வொரு பாத்திரத்தையும் வாழ்ந்து காட்டியிருக்கிறான்! பக்தர்களை வாழ வைத்திருக்கிறான் இந்த மாவீரன்; கோடலம்பாக்கத்து முக்கிய பகுதியில் குடியேறி 'வடபழனி' என்ற அழகான பெயரையும் அதற்குப் பெற்றுத் தந்திருக்கிறான்.



வடபழனி முருகன் கோயிலுக்குக் கிழக்கே பதஞ்சலி ஆசிரமம் இருந்ததாகச் சொல்கிறார்கள். சோழர்கள் காலத்தில் கட்டப்பட்ட வியாக்ரபுரீசுவரர் கோயிலும் பதஞ்சலீஸ்வரர் கோயிலும் இப்பகுதியின் பழைமைக்கு இன்றும் சான்றாக இருக்கின்றன. சிவபெருமான் திரிபுராதிகளை அழிப்பதற்காக மேரு மலையை வில்லாக வளைத்த இடம் இது என்றும், கர்கோடகன் என்ற நாகராஜன் திருமாலை வழிபட்டு வந்த இடம் இதுவே என்றும் சொல்லப்படுகிறது.

ஆனால் முருகன் இவ்விடத்தில் தங்க முடிவெடுத்தது சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்புதான்! அக்காலத்தில் இப்பகுதியில் வாழ்ந்த அண்ணாசாமி நாயகர் என்ற முருக பக்தர் வயிற்றுவலியால் அவதிப்பட்டாராம். பழனி சாது ஒருவரது அறிவுரையின் பேரில் கிருத்திகைதோறும் திருப்போரூர் சென்று முருகனை வழிபட்டு வந்திருக்கிறார். ஆயினும் வயிற்றுவலி குறையவில்லை. திருத்தணியும் போய் வந்தார். அப்போதும் நிவாரணம் இல்லை. பிற அடியார்களைப் போல் திருப்புகழைப் பாட இயலாத வருத்தத்தில் தமது நாவையே இவர் முருகனுக்குக் காணிக்கையாக்கிவிட்டு மயங்கி விழுந்தாராம். சுற்றியிருந்தவர்கள் புனித நீர் தெளித்து அவரைத் தெளிவித்திருக்கிறார்கள். நாவற்ற நிலை





யிலும் "முருகா! முருகா" என்று அழைத்திருக்கிறார் நாயகர்! அதன்பின் அவர் வயிற்றுவலி மாயமாய் மறைந்துவிட்டது. நாக்கு மாயமாய் வளர்ந்துவிட்டது!

இவ்வாறு அனுக்கிரஹம் பெற்றதாகச் சொல்லப்படும் அண்ணாசாமி நாயகர் மிகத் தீவிர பக்தராகி, குறி சொல்லும் ஆற்றல் பெற்றாராம். பழனி முருகன் படம் ஒன்றை ஒரு கீற்றுக் கொட்டகையில் வைத்து அதையே கோயிலாகக் கொண்டு வழிபட்டிருக்கிறார். 'குறிமேடு' என்று அவ்விடம் அழைக்கப்படலாயிற்று. இரத்தினசாமி செட்டியார் என்ற நண்பர் உதவ, குறிமேட்டின் அருகில் சிறு கோயில் எழுந்தது. அங்கே வடபழனி ஆண்டவர் சிலை நிறுவப்பட்டு கும்பாபிஷேகம் நடந்தது. ஆனால் அதற்குள் அண்ணாசாமி நாயகர் தமது முருகனின் இணையடி நிழல் சேர்ந்திருந்தார். இரத்தினசாமி செட்டியார் தம்பிரானாகப் பொறுப்பேற்றார். அவருக்குப்பின் அவரது சீடர் பாக்கியலிங்க தம்பிரான் ஐம்பது ஆண்டுகள் தவநெறியில் வாழ்ந்து, குறி சொல்லி, திருப்பணி

களையும் தொடர்ந்தார்.

இன்றும் வடபழனி ஆண்டவர் திருக் கோயிலின் தென் கிழக்குப் பகுதியில் பழைய 'குதிமேடை' இருந்த இடத்தைக் காணலாம்.

தென்திசை நோக்கிய ராஜகோபுரத்தின் கதைச் சிற்ப அழகை ரசித்துக் கொண்டே உள்ளே நுழைவோம்.

வெளிப் பிராகாரத்தில் வரசித்தி விநாயகர் வீற்றிருக்கிறார். பிரதக்ஷிணமாக வந்தால், சொக்கநாதர், வள்ளிதேவசேனா சமேதனாக முத்துக்குமாரசுவாமி, மீனாக்ஷி அம்மன், உத்ஸவ ஷண்முகர், அருணகிரிநாதர், அட ஆஞ்சனேயர் கூட இருக்கிறார்!

உள் பிராகாரத்தில் உத்ஸவ மூர்த்தங்கள் சூழ கருவறையில் நிற்கிற பால தண்டாயுத பாணியைப் பார்க்கிறோம். இடது கரத்தைத் தொடையில் ஊன்றி, வலக்கரத்தில் தண்டம் தரித்து கோவண ஆண்டி கோலத்தில் செந் தாமரை வண்ண மேனியனாகக் காட்சி தரு கிறான் முருகன்.

அபிஷேகங்கள் வரிசையாக நடக்கின்றன. சந்தனம் பொழிகிறபோது குளிர்ந்து சிரிப்பது போலவும்; பன்னீர் சொரிகிறபோது குலுங்கிச் சிலிர்ப்பதுபோலவும், பாலாபிஷேகத்தின் போது களித்து மகிழ்வது போலவும், விதவித மாய் நம் கண்களுக்குப் புலப்படுகிறான்.

அபிஷேகங்கள் முடிந்து ராஜ அலங்காரம் செய்கிறார்கள். அடேயப்பா! சின்னஞ் சிறுவனாக சிரித்து நின்றவன் இப்போது ஈரேழு பதினாலு உலகங்



களின் அதிபதியாக அல்லவா வளர்ந்து நிற்கிறான். திருச்சுற்றில் வலம் வந்தபோது கண்ட அருணகிரி நாதரும் இதே ராஜ அலங்காரத் துடன் பொலிந்தது நமக்கு ஞாபகம் வருகிறது. ஆண்டவனை நினைத்து நினைத்துப் பாடிய அந்த அடியாருக்கு அவனது அழகு வந்து சேர்ந்து கொண்டதில் ஆச்சர்யம் என்ன!

நித்தியோத்ஸவனாக அடியார்களின் வருகையையும் வேண்டுதல்களையும் ஏற்று நிற்கிற முருகப் பெருமான், கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக வடபழனி திருப்புகழ் சபை இங்கே நடத்திவரும் அருணகிரிநாதர் விழாவை அனுபவித்து வருகிறான். திருப்புகழ் பாக்களாலேயே முழு நேரக் கச்சேரிகளை முன்னணி வித்வான்கள் பாடுவது இந்த விழாவின் தனிச் சிறப்பு. இந்த வடபழனி முருகனுக்குத் தனியே திருப்புகழ் இல்லை என்ற குறையே இல்லாது செய்துவிட்டது இவ்விழா!

இந்த வடபழனி ஆண்டவன் பேரில் தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை பிரத்யேகப் பாடல்களும் இயற்றியிருக் கிறார்:

**கண்டார்தம் மனங்கவரும் முண்டிதமாம்**
**சிரத்தழகும் காணக் காணக்**
**கொண்டாடத் தக்க திரு நீற்றழகும்**
**கண்டிகையின் கோலச் சீரும்**

**பண்டிய நான்மறைக் கோவணச் சிறப்பும்**
**கொண்டு வடபழனி மேவும்**
**தண்டாயுதப் பெருமான் திருவடிக்கே**
**அகங்குழைந்து தழைந்து**
**வாழ்வோம்.**

அகங் குழையவும் சிரம் தழையவும் நாம் தனியாக எந்த முயற்சியும் செய்ய வேண்டாம். வடபழனியில், அவன் சன்னதியில் போய் நின்றாலே போதும் உடலும் மனமும் பணிந்து உருகிவிடும். அப்படியொரு அழகும் மகிமையும் அவனுக்கு உண்டு.

உலகத்தைப் படைத்து அனைத்திலும் வியாபித்திருக்கும் பரம்பொருள், வரையறுக்கப்பட்ட வடிவிலே மனிதர் மனத்தில் இடம் பெறுகிறது. இந்த வடிவங் களை மனத்தில் இறுத்தி இறுத்தி மாந்தர்கள் பக்தியில் திளைத்து மகிழும்போது அனுபூதி நிலையை அடைகிறார்கள். அவ்வாறு அனுபூதி நிலையில் காலங்காலமாக அனுபவிக்கப்பட்ட ஷண்மத கடவுளரை ஆதி சங்கரர் வரிசைப் படுத்தினார். சிவன் (சைவம்) திருமால் (வைஷ்ணவம்) சக்தி (சாக்தம்) கணபதி (காணாபத்யம்) சூரியன் (சௌரம்) முருகன் (கௌமாரம்).

நாயன்மார்கள் சிவனையும் ஆழ்வார்கள் நாராயணனையும் அனுபவித்துப் பாடியது போல் முருகனை சித்திரச் செந்தமிழமுதால் பாடி அனுபவித்த அருளாளர்கள் அனேகர்

இத்தனை மகான்கள் அனுபவித்த அந்த முருகன் யார்? எதற்கு வந்தான்? எங்கிருந்து வந்தான் போன்ற விவரங்கள் வடமொழியில் வேதவியாசர் அருளிய ஸ்காந்தத்திலும் கச்சியப்ப சிவாச்சார்யார் தமிழில் அருளிய கந்த புராணத்திலும் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

சமீப காலங்களில் தமிழ்ப் பெரியார் கி.வ.ஜவும் திருமுருக வாரியார் சுவாமிகளும் தமிழ்க்கடவுளை நமக்கு நிறைய உணர்த்தியிருக்கிறார்கள். இவர்களுக்குப் பணியைச் சுலபமாக்கியவர் கடலளவு பாடிச் சென்ற அருணகிரிநாதர்தான். கடலைப் போலவே லயமும், ஆழமும், சாச்வதமும் கொண்ட பாடல்கள் அவருடையவை. ஓயாத அலைகளைப் போல் முருகன் குறித்த ஓயாத நினைவுகளை, சிந்தனைகளை நம் மனத்திலே எழுப்ப வல்லவை.

அருணகிரியார் நமக்கு அறிவிக்கும் முருகனின் இயல்புகள் என்ன...?

***அவனே பரம்பொருள்; உலகை***
***உய்விக்க வந்த தெய்வம்***
***யாவுமே அவனிடத்தில் உள; அவனே***
***யாவற்றிலும் உளன்***
***சர்வ வியாபகமுடையவன் அவன்.***
***மாறாத இளமையும் அழகும்***
***வாய்ந்தவன்***
***அவன் வடிவமே ஆனந்த மயம்***
***எல்லா உயிர்களையும் தன்னிடம்***
***சர்ப்பவன்***
***அன்பே உருவான முருகன்.***

அப்படிப்பட்டவனை தரிசிக்க தரிசிக்க நம் மனமும் அன்பால் நிறைகிறது. 'சாந்தமாகி மனம் குவிந்து ஏகாந்த மோன நிலை' பெறுகிறது.

அந்த அன்பு தன்னை மறக்கச் செய்கிறது;

அன்பு நிறைந்த பிறருடன் நம்மைச் சேர்த்து தொண்டாற்ற வைக்கிறது;

அன்பு நம் மனத்தை உருக்கி இளகச் செய்கிறது.

பிறர் மேல் அன்பைப் பொழியச் செய்கிறது.

நம் அன்பை ஏற்பவருடைய மனமும் இளகி நம்முடையதுடன் ஒன்றுபடுகிறது.

அன்பில் உள்ளங்கள் நிறைய, நிறைய வேறுபாடுகள் தகர்ந்து போகின்றன. அமைதி பிறக்கிறது. சாந்தி பிறக்கிறது.

தலம்தோறும், புன்னகை தவழ தரிசனம் தரும் தமிழ்க்கடவுள் முருகன் உணர்த்தும் தத்துவமும் இதுவே; வாழ்வியலும் இதுவே.

(நிறைந்தது)

# தூது போ முத்தமே...

பிரபு தெருமுனையில் ஸ்கூட்டரைத் திருப்பியபோதே கவனித்து விட்டான். வழக்கம் போல் வீட்டு மதில் சுவரருகே குப்பை கொட்டப் பட்டிருந்தது. சட்டென மனத்திற்குள் எரிச்சல் உண்டாகி, அது 'விறு விறு' என முகத்திலும் ஏறியது. வண்டியின் வேகத்தை அதிகப்படுத்தி வீட்டு வாசலில் நிறுத்தினான்.

பிரபுவின் வீடு தெருவின் கடைசியில் இருக்கிறது. சுற்றிலும் மதில் சுவர். மதில் சுவருக்கு இந்தப் பக்கம் சற்று காலியான அரசு இடமிருந்தது. மற்றவர்களுக்கு வசதியாகிவிட்டது. வீட்டின் குப்பைகளைக் கொண்டு வந்து அங்கே போட்டு விடுவார்கள்.

இன்னும் சில அடிகள் நடந்தால் குப்பைத் தொட்டி இருக்கிறது. ஆனாலும் என்ன? குப்பையைக் குப்பைத் தொட்டியில் கொட்டுகிற பழக்கம் தொண்ணூறு சதவிகிதம் பேருக்கு இருப்பதில்லையே. அதனால் அந்த மதில் சுவர் குப்பைத் தொட்டி ஆகிவிட்டது.

பிரபு பலமுறை குப்பையைக் கொட்ட வந்தவர்களைத் திட்டியிருக்கிறான். அதனால் அவனது தலை தெரிந்தால் குப்பைத் தொட்டியில் கொட்டுவது, இல்லையென்றால் அங்கேயே கொட்டுவது என்று சில தாய்க் குலங்கள் தீர்மானித்திருந்தனர். அந்தத் தீர்மானப்படி இபபோது யாரோ கொட்டி விட்டுச் சென்றிருக்கிறார்கள்.

சாதாரண நேரத்திலேயே பிரபுவுக்கு எரிச்சல் வரும். வாசலில் நின்று பொதுவாய் அந்தத் தெருவில் இருக்கும் முப்பத்திரண்டு வீடுகளுக்கும் சேர்த்து திட்டுவான். இன்று அலுவலகத்தில் மேலதிகாரியிடம் அர்ச்சனை வாங்கியிருந்தான். அதனால் எரிச்சலின் சதவிகிதம் கூடியிருந்தது.

வேகமாக வீட்டிற்குள் நுழைந்தான். ஹாலில் தொலைக்காட்சி ஓடிக் கொண்டிருக்க, அவனது தாய் காஞ்சனா பார்த்துக்கொண்டிருந்தாள். ஆறு வயது மகன் சந்தோஷ் கார் பொம்மையை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான்.

"ஏய், ஜீவிதா" என்று கத்தினான்.

சமையலறையில் இருந்து வெளிப்பட்டாள் மனைவி.

"வெளியே யாரோ குப்பையைக் கொட்டி இருக்காங்களே, யார் கொட்டினது?" என்று கேட்டான்.

"தெரியலையே" என்றாள்.

"என்ன தெரியலையே? வீட்டுலேதானே இருக்கே... என்ன கிழிக்கறே?" என்று கத்தினான்.

ஜீவிதாவுக்கு 'சுருக்' என்றது.

"ஏன் இப்படி வந்ததும் வராததுமா கத்தறீங்க? யார் போட்டதுன்னு

ஆரணி யுவராஜ்



எனக்கு எப்படித் தெரியும்? இருபத்து நாலு மணி நேரமும் வீட்டு வாசலிலேயே போய் நின்னுட்டா இருக்க முடியும்? என்ன கிழிக்கறேன்னு கேட்கறீங்களே, சும்மா உட்கார்ந்து டீவியா பார்த்துட்டு இருக்கேன்?'' என்றாள்.

அவ்வளவுதான்! மாமியார் காஞ்சனா சட்டென தலையைத் திருப்பினாள்.

"யாரை இப்படி ஜாடையாச் சொல்றே?'' என்று கேட்டாள்.

"நான் உங்களைச் சொல்லலை. சாதாரணமாதான் சொன்னேன்'' என்றாள் ஜீவிதா.

"ஏய், வர வர உனக்கு வாய் அதிகமாயிட்டே போகுது'' என்று கத்தினான் பிரபு.

வாய்ச்சண்டை வலுத்துக் கூச்சலானது.

அலுவலகம் விட்டு வந்து அறைக்குள் ஆடையை மாற்றிக்கொண்டிருந்த நடராஜன் நடக்கிற கூத்தைக் கவனித்துக்கொண்டுதான் இருந்தார். தன் மகன் பிரபு, ஜீவிதாவை நோக்கி கோபமாகச் செல்வதைக் கண்டு அறையை விட்டு வெளிப்பட்டார்.

"டேய், பிரபு. என்ன இங்கே கூச்சல்?'' என்று கேட்டார்.

பிரபு நின்று திரும்பினான். "வெளியே யாரோ குப்பையைப் போட்டிருக்காங்க'' என்றான்.

"அதுக்கு உள்ளே வந்து கூச்சல் போடறதுல என்னடா லாபம்? போ.. போய் கை காலைக் கழுவிக்கிட்டு வா. வந்ததும் வராததுமா கத்திக்கிட்டு இருக்கே'' என்றார்.

"ஆமா. கடைசியில என்னையே சொல்லுங்க'' என்ற பிரபு விலகிச் சென்றான்.

முகம் கழுவிக் கொண்டு வந்தவனிடம் ஜீவிதா காபியை நீட்டினாள்.

''தேவையில்லை'' என்றவன் விருட்டென வெளியே கிளம்பிவிட்டான். ஸ்கூட்டர் கோபமாக உதைபட்டுக் கிளம்புகிற சப்தம் கேட்டது.

காஞ்சனா தொலைக்காட்சியை அணைத்துவிட்டு அறைக்குள் சென்றுவிட்டாள். சந்தோஷ் மட்டும் இந்த கூச்சல்களால் பாதிக்கப்படாமல் தொடர்ந்து விளையாடிக் கொண்டிருந்தான்.

''சந்தோஷ், வந்து காஃபியைக் குடி'' என்றழைத்தாள் ஜீவிதா.

விளையாட்டு மும்முரத்தில் இருந்தவன் "எனக்கு வேணாம்'' என்றான்.

"என்ன திமிரா? வாடா'' என்று கோபத்தோடு அழைத்தாள்.

"வேணாம் போ'' என்றவன் தொடர்ந்து விளையாடிக் கொண்டிருந்தான்.

"ராஸ்கல், ஜாண் இருக்கறப்பவே என்னடா பிடிவாதம் உனக்கு?...'' ஜீவிதா அவனை நெருங்கினாள். கார் பொம்மையை வாங்கி, தூக்கிப் போட்டாள். அவன் கையைப் பிடித்துத் தூக்கினாள். 'பளார்' 'பளார்' என்று முதுகில் அறைந்தாள்.

அவன் அழ ஆரம்பித்தான்.

"சொன்ன பேச்சைக் கேட்பியா?'' என்று ஆட்காட்டி விரலை உயர்த்திக் கேட்டாள்.

''ம்'' என்றான் பயமும் அழுகையும் கலந்து.

"வா. வந்து காஃபியைக் குடி'' என்று கூறி

இழுத்துச் சென்றாள்.

சந்தோஷ் அழுதவாறே காஃபியைக் குடித்துவிட்டு வந்தான். சற்று நேரம் சோபாவில் தாத்தா பக்கத்தில் சோகமாகப் படுத்திருந்தான்.

"அழாதே. கண்ணைத் துடை" என்ற நடராஜன் அவன் கண்களைத் துடைத்தார். அவன் அழுகை நின்றது. எழுந்து சென்று தொலைக்காட்சியைப் போட்டு கார்டூன் நெட்வொர்க் வைத்தான்.

"டேய் சந்தோஷ்" என்று அறைக்குள்ளிருந்து காஞ்சனாவின் குரல் கேட்டது.

"என்ன பாட்டி?" என்று கேட்டான்.

"தலையை வலிக்குது! டீவியை நிறுத்து" என்றாள்.

"போ. நான் கார்டூன் பார்க்கணும்" என்றான்.

"இப்ப எழுந்துவந்தேன்னா உதை விழும். நிறுத்துடா" என்று கத்தினாள்.

சந்தோஷ் நிறுத்திவிட்டான். மீண்டும் கார் பொம்மையை எடுத்துக்கொண்டு விளையாட ஆரம்பித்தான்.

வெளியே போயிருந்த பிரபு வந்தான். "அப்பா, நாளைக்கு போர்டு எழுதறானே மணி, அவனை வரச் சொல்லி இருக்கேன். காம்பௌண்ட் சுவரிலே 'இங்கே குப்பைகளைக் கொட்டாதீர்கள். மீறினால் சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும்'னு எழுதச் சொல்லி இருக்கேன். நான் இல்லாத நேரத்துல வந்தா பார்த்துக்கங்க" என்றான்.

"சரிடா" என்றார் நடராஜன்.

அப்போது சந்தோஷ் விட்ட கார் பிரபுவின் காலடியில் வந்து முட்டி நின்றது.

"ஏய் சந்தோஷ், ஹோம் ஒர்க் எழுதாம என்னடா விளையாடிட்டு இருக்கே" என்றான்.

"ஹோம் ஒர்க்கை எழுதியாச்சு டாடி." என்றான்.

"எழுதிட்டா என்ன? போய்ப் படி! சும்மா விளையாடிக்கிட்டே இருக்கே" என்று கத்தினான்.

"சொல்லிட்டே இருக்கேன். மறுபடியும் வந்து காரைத் தொடறே. வர வர இந்த வீட்டுல யாரும் என் பேச்சைக் கேட்கறதில்லே. குளிர் விட்டுப் போச்சு. இல்லே" என்ற பிரபு சந்தோஷின் கன்னத்தில் 'பளார்' என்று அறைந்தான்.

அந்த எதிர்பாராத அடியால் நிலைகுலைந்த சந்தோஷ் கீழே விழப் போக, நடராஜன் சட்டென பிடித்துக்கொண்டார். அவன் அவரை அணைத்துக் கொண்டு 'ஓ'



"தலைவர் ரொம்ப சந்தோஷத்துலே இருக்காரமே ஏன்?"

"இருகட்சிகள் இணைப்புக்குப் பிறகு ஒரு கோஷ்டியின் தலைவராக இருக்க சம்மதம் கிடைச்சிருச்சாம்!"

— அ. ராஜா ரஹ்மான்

என அழ ஆரம்பித்தான்.

"வாயை மூடுடா. சத்தம் வெளியே வந்தது, தொலைச்சுடுவேன்" என்றான் பிரபு மிரட்டலாக.

நடராஜன் கோபமானார். "நீ வாயை மூடுடா. எல்லோரும் என்ன நினைச்சுக்கிட்டா இருக்கீங்க? யார் யாருக்கோ யார் யார் மேலேயோ இருக்கிற கோபத்தை எல்லாம் காட்டவா குழந்தைங்களைப் பெத்துக்கறீங்க? கொஞ்சம் முன்னாடி சொன்னியே. சுவத்துல குப்பையைக் கொட்டாதீர்கள்னு எழுதணும்னு. அந்த மாதிரி ஒரு போர்டுல 'இங்கே உணர்ச்சிகளைக் கொட்டாதீர்கள்' அப்படின்னு எழுதி இவன் கழுத்துல தொங்க விட வேண்டியதுதான். யாருக்கு யார் மேலே கோபம் இருக்கோ அவங்கக்கிட்டே காட்டுங்க. அநாவசியமா உங்க கோபங்களை, எரிச்சல்களை, குப்பையாக்கி குழந்தைங்க மேலே கொட்டாதீங்க. அதனால அந்த குழந்தையோட மனசு எந்த அளவு பாதிக்கும் தெரியுமா? பைத்தியக்காரங்களா!... நீ வாடா" என்றவர் சந்தோஷைத் தூக்கிக் கொண்டு விலகினார்.

அங்கே நீண்ட நேரம் அமைதி நிலவியது. பிறகு பிரபு எழுந்து வந்து சந்தோஷைத் தூக்கிக் கொண்டான்.

"ஸாரிடா, டாடிக்கு ஒரு முத்தம் கொடு" என்றான்.

சந்தோஷ், பிரபுவின் கன்னத்தில் முத்தமிட்டான்.

"அப்படியே போய் அம்மாவுக்கும், பாட்டிக்கும் கொடுத்துட்டு வா" என்று சிரித்தார் நடராஜன். ○



• 'வில்லன்' படத்தில் கிரண், அஜித்.

"ராஜா' படம் தான் நான் நடித்த கடைசி மென்மையான படம். இனி முழுக்க முழுக்க ஆக்ஷன்தான்" என்று சொன்னார், வில்லன் அஜித் - ஐந்து நாள் தாடி, மீசையோடு கொஞ்சம் மெச்சூர்டான தோற்றத்தில் இருந்த 'வில்லன்' பட அஜித்! இந்தப் படத்தில் பஸ் கண்டக்டராக வருகிறாராம் அஜித். அப்போ பஸ் டிரைவர்...? ரமேஷ் கண்ணா! அதென்ன வில்லன் என்று தலைப்பு? ஒருவேளை அஜித் முதல்முறையாக வில்லனாக நடிக்கிறாரோ? அதுதான் இல்லை. "கதாநாயகன் அவனது எதிரிகளின் கண்களுக்கு வில்லன்தானே... அந்தக் கோணத்தில்தான் இந்தத் தலைப்பு" என்று புல்லரிக்க வைத்தார்

# வில்லனாகிறார் அஜித்!



• 'ரிமோட்' சரவணன்

அஜித்தை முதல்முறையாக இயக்கப் போகிற கே.எஸ். ரவிகுமார். அஜித்துக்கு ஜோடி? வேறு யார்...? 'ஜெமினி' கிரண்தான். சினேகா விபத்தில் படுத்து சிகிச்சை எடுத்துக்கொண்டிருக்கும் இடைவெளியில் அவருக்கு வர வேண்டிய நிறைய வாய்ப்புகள் இந்த ஜெய்பூர் அம்மணிக்குப் போய்க் குவிகிறதாமே...!

நடிகர் சரவணனை ஞாபகம் இருக்கா? அண்ணன் ரீ-என்ட்ரீ! 'தாயுமானவன்' படத்தை எழுதி இயக்கியிருக்கிறார்.

"சினிமாவில் தோத்துட்டோம்னா அம்மா, அப்பா, அண்ணன், தம்பிங்க கூட கைவிட்டுடுவாங்க... ஆனால் என்னை மறுபடியும் தூக்கி நிறுத்தியிருக்கிறது என்னோட நண்பர்கள் கந்தசாமியும், ராஜமாணிக்கமும்தான். அவங்கதான் இந்தப் படத்தைத் தயாரிச்சிருக்காங்க. என்னோட மொத்த உழைப்பையும் இதுலே போட்டிருக்கேன்... வெற்றி உறுதி" என்று சொல்லும் சரவணன் தமது நிஜ காதல் அனுபவத்தை அடிப்படையாக வைத்து கதையை உருவாக்கியிருக்கிறாராம்.

ஸ்ரீசந்தனா என்ற சென்னை வாழ் பெண்ணை சரவணன் பத்து வருஷமாகக் காதலிக்கிறாராம். டும்டும்...? விரைவில்!

ஐந்து வருடங்களுக்குப் பிறகு மறு



• 'நீ வரும் பாதையெல்லாம்' காயத்ரி ஜெயராம், விமல்

படியும் படம் எடுக்க வந்திருக்கிறார் கார்வண்ணன். 'முதல்வன்' படத்துக்கு இன்ஸ்பிரேஷன் என்று பேசப்பட்ட 'பாலம்' படத்தை எடுத்தாரே அந்த மனிதர்தான். பயணிகள் பேருந்தை சில இளைஞர்கள் கடத்திக் கொண்டு போய் அரசாங்கத்துக்குக் கோரிக்கை வைக்கிறார்களாம். பேருந்தைக் கடத்தும் இளைஞர்கள் நல்லவர்கள், தீவிரவாதிகள் இல்லை. அவர்கள் வைக்கும் கோரிக்கையும் ரொம்ப ரொம்ப வித்தியாசமானது. படத்தோட கருவே அதுதான் என்கிற கார்வண்ணன், இந்த முறை, பணத்தைத் தண்ணீராகக் கரைத்து, பிரமாண்டமாகப் படத்தைத் தயாரிக்கப் போகிறாராம்! படத்தின் தலைப்பு 'ரிமோட்'!

'மஞ்சக்காட்டு மைனா' காயத்ரி ஜெயராமை காணோமேனு தேடிக்கிட்டிருந்தா, திடீரென்று வந்து எதிரே நிற்கிறார். இப்போ 'நீ வரும் பாதையெல்லாம்' படத்தின் நாயகி. 'ஸ்ரீ' படம் தாமதமாகிறதாலே இந்த இடைவெளி விழுந்துடுச்சு என்று கண்களால் சிரித்த காயத்ரிக்கு 'நீலா' கன்னடப் படத்திற்காக கர்நாடக அரசின் 'சிறந்த நடிகை' விருது கிடைத்துள்ளது. 'நீ வரும் பாதையெல்லாம் படத்தில் அறிமுகமாகும் 'விமல்' மேலே இப்பவே நிறைய பேரோட கண்ணு விழுந்துடுச்சு... பையன் வாட்ட சாட்டமா கொஞ்சம் தமிழ் நேட்டிவிட்டியோட இருக்கிறதுதான் ப்ளஸ்... என்ன ஒண்ணு, முதல்படம் ஹிட் ஆகிவிட்டால் அடுத்து நல்ல கதையா தேர்வு பண்ணி நடிக்கணும்.. முதல்வர் ஆசையெல்லாம் மூட்டை கட்டி வைச்சுட்டு...

அர்ஜுன் முகத்துலே சாப விமோசனம் கிடைச்ச மாதிரி சந்தோஷம்! ஜேம்ஸ் பாண்ட் போல, ப்ரொபஷனல் 'கிஜடி'யாக நடிக்கணும் என்று ரொம்ப நாள் ஆசையாம். ஷங்கரின் உதவியாளர் இளங்கண்ணன் இயக்கும் 'ஒற்றன்' படத்தில் இது நிறைவேறப் போகுதே!



• 'தாயுமானவன்' படத்தில் பிரேமா- சரவணன்

ராஜு சுந்தரத்தோடு காதல் முறிவு, கமலோடு கிசுகிசு, மும்பைக்கு மூட்டையைக் கட்டிவிட்டார் என்றெல்லாம் இமேஜ் விழுகிற மாதிரி செய்திகள் வந்து கொண்டிருந்தாலும், இப்போதைக்கு சிம்ரன்தான் நம்பர் ஒன்! நாயகி வேஷம் போதாதென்று ஒற்றைப் பாடலுக்கு ஆடுவதிலும் எக்ஸ்பர்ட்! 'யூத்' படத்தில் விஜய்யோடு சேர்ந்து போட்டிருக்கும் அபாயகரமான டப்பாங்குத்தே சாட்சி!

— சக்கரம்



• 'ஒற்றன்' படத்தில் சிம்ரன் - அர்ஜுன்








# நடக்குமென்பார்;

**மேஷம் :** இங்கிலாந்தில் நடைபெற்ற கிரிக்கெட் போட்டியின் இறுதி ஆட்டத்தில் வெற்றிக்குப் பின் கங்கூலி அடைந்த சந்தோஷம் மாதிரி இந்த வாரம் முழுவதும் மகிழ்ச்சியில் துள்ளப் போறீங்க. மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் கூடும். புதிய முயற்சிகள் தேடி வரும். இதனால ஆதாயம் உண்டு. அலுவலகப் பணியாளர்களுக்கு மேலதிகாரிகளின் பாராட்டும், புகழும் உண்டு. பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. வெளிநாட்டு வர்த்தகம் ஆதாயம் தரும். குடும்பத்துலே அமைதி நிலவும். இதுவரை இருந்து வந்த பிரச்னைகள் மாயமாகும்.

**ரிஷபம் :** இந்த வாரம் பண வசதி தாராளமா நடமாடும். விருந்து உபசாரம், உல்லாசம்னு ஜாலியா இருக்கப் போறீங்க. சுபகாரியங்கள் திருமண முயற்சிகள் கைகூடும். உத்தியோகத்தில் எல்லா காரியத்திலும் வெற்றி உண்டு. பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் போன்றவை ஏற்படும். புதிய பொறுப்புகள் தேடி வரும். புதிய வியாபாரம், தொழில் முயற்சிகளில் வெற்றி உண்டு. சொத்து சம்பந்தமானப் பிரச்னைகள் சிக்கல்கள் நீங்கி நல்ல விதமாக முடியும். அரசியல்வாதிகளுக்கு மதிப்பு, அந்தஸ்து உயரும்.



**மிதுனம் :** இதுவரை இழுத்தடிச்சிட்டிருந்த பிரச்னைகள் இப்போது நிறைவேறும். மறைமுக எதிர்ப்புகள் மாயமாகும். சிலர் பயணத்தால் வெற்றி பெறுவாங்க. வீட்லேயும் மனசுலேயும் அமைதி பகவான் வீற்றிருப்பார். வியாபாரத்தில் போட்டி பொறாமை மறையும். வர வேண்டிய தொகை வந்து சேரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. சினிமா துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புதிய வாய்ப்புகள் வந்து சேரும். அழகு சாதனம், அலங்காரப் பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். குடும்பத் திலே ஒற்றுமை அமைதி நிலவும். சிலர் புதிய வீடு, நிலம் வாங்க வாய்ப்பிருக்கு.

**கடகம் :** உங்க ஜென்ம ராசியில் குரு, செவ்வாய், சூரியன் மற்றும் புதன் எல்லாரும் சஞ்சரிக்கிறாங்களே. அப்புறமென்ன, 'மஜா'தான். எந்தக் காரியத்தை எடுத்தாலும் தலைகீழாக நின்னாவது முடிச்சிடுவீங்க. உங்க திறமையும் புத்திசாலித்தனமும் பிரகாசமடையும். வியாபாரத்தில் வளர்ச்சி உண்டு. கொடுக் கல் வாங்கல் வகையில் அனுகூலமான போக்கு உண்டு. குடும்பத்துலே ஒற்றுமை அமையும். சுபகாரிய முயற்சிகள் கைகூடும். பெண்கள் தங்கள் எண்ணம் நிறைவேறும்.

**சிம்மம் :** இந்த வாரம் எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடி வரும். "அட இங்க பார்யா' என்று நீங்களே ஆச்சர்யப்படப் போறீங்க! பண வசதிக்குப் பஞ்சமில்ல. வெளியூர் அல்லது வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வந்து சேரும். சிலர் வெளிநாடு பயணம் போகலாம். உங்க புத்திசாலித்தனம், வாக்குவன்மை பிரகாசமடையப் போகுது. பெயர் புகழ்கூடும். மத்தவங்க பாராட்டும்படி சாதனை படைக்கப் போறீங்க. புதிய பொறுப்புகள் தேடி வரும். கணவன் மனைவிக்குள்ள சின்ன சின்ன மனக்கசப்புகள் வரலாம். விட்டுக் கொடுத்துப் போறது நல்லது.

**கன்னி :** குடும்பத்துல கல்யாணம் மற்றும் சுபகாரிய முயற்சிகள் நடக்க வாய்ப்பிருக்கு. இது நாள் வரை பிரிந்து இருந்தவர்கள் இப்ப ஒன்று சேருவாங்க. கல்வி, ஆராய்ச்சி துறைகளில் ஈடுபாடு உள்ளவர்களுக்கு மற்றவர்கள் ஆச்சர்யப் படும்படி சாதனை புரிவாங்க. அலுவலகத்தில் எதிர்பாராத திருப்பம் வரும். எதிரி கள் அடங்கிப் போவாங்க. மனசுல தெளிவும் உற்சாகமும் ஏற்படும். வேலை விஷயமாக சிலர் வெளி யூர் வெளிநாடு போக வாய்ப் பிருக்கு.

**அக்னிசர்மா பக்கம்**

# நடக்கும்!

**துலாம் :** இந்த வாரம் பண நடமாட்டம் சரளமா இருக்கும். பணமிருந்தா மகிழ்ச்சி தானே வராதா என்ன? குடும்பத்துல குதூகலம் தாண்டவமாடும். நண்பர்கள் உறவினர்கள் உதவ முன் வருவாங்க. கடன் தொல்லை நீங்கி மன நிம்மதி ஏற்படும். சிலருக்கு நிர்வாகத் துறையில் இடமாற்றம், பதவி உயர்வு கிடைக்கும். வியாபாரத்தில் போட்டி பொறாமை விலகும். ஏற்றுமதி இறக்குமதியில் ஆதாயம் உண்டு. பேச்சில் இனிமை அவசியம். பெண்களுக்கு இது உற்சாகமான வாரம். அரசியல்வாதிகளுக்கு மதிப்பு செல்வாக்கு அந்தஸ்து உயரப் போகுது.

**விருச்சிகம் :** மனசுலே தெளிவான சிந்தனையும் செயலில் வேகமும் உண்டாகும். வெளிநாட்டுப் பயணம் சொல்ல சிலருக்கு வாய்ப்பிருக்கு. கடினமானக் காரியங்களையும் திறமையோடு செயல்பட்டு முடிப்பீங்க. மற்றவங்க பாராட்டற மாதிரி ஏதாவது செய்வீங்க. புதிய முயற்சிகள் கூடி வரும். பொன், வெள்ளி, ஆபரணங்கள் ஆதாயம் கொண்டு வரும். குடும்பத்துல ஒற்றுமை நிலவும். தாமதமாகிவந்த திருமண நிகழ்ச்சிகள் இப்போது நிறைவேறும். சினிமாத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புதிய வாய்ப்புகள் கதவைத் தட்டும்.

**தனுசு :** இந்த வாரம் எதிலும் எச்சரிக்கையா இருங்க. குரு எட்டில் இருப்பதால் கவலைப்படத் தேவையில்லைனாலும் கொஞ்சம் விழிப்போடவே இருங்க. உடல் ஆரோக்கியத்துல கவனம் வையுங்க. உத்தியோகத்தில் பொறாமை, போட்டி, காரணமாக எதிர்ப்புகள் இருந்தாலும் உங்க புத்திசாலித்தனத்தால ஈஸியா சமாளிப்பீங்க. புதிய தொழில்களில் நிதானம் அவசியம். சினிமா, நாட்டியம், ஓவியம் சங்கீதம் போன்றத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு புகழ் பாராட்டு கிடைக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க.

> **இசைக் கலைஞர் சண்முகப் பிரியாவுக்கு (தனுசு) புகழ், பாராட்டு கூடும்.**



**மகரம் :** தெய்வ பலம் இந்த வாரம் கூடும். இதனால மனசுல தன்னம்பிக்கையும் தெளிவும் பிறக்கும். எதிர்ப்புகள் மறையும். உத்தியோகத்தில் மேன்மை உண்டாகும். உங்க திறமை சாமர்த்தியத்தால் சிக்கலான அலுவலக வேலைகளை நிறைவேற்றி வெற்றி காண்பீங்க. வியாபாரத்தில் அதிர்ஷ்டமான திருப்பம் ஏற்படும். கூட்டுத் தொழில்களில் முன்னேற்றம் உண்டு. கொடுக்கல் வாங்கல்ல சுமுகமான நிலை உண்டாகும். குடும்பத்துல இனிமையான சம்பவங்கள் நிகழ வாய்ப்பிருக்கு.



**கும்பம் :** இதுவரை கண்டு கொள்ளாமலிருந்த நண்பர்கள், உறவினர்கள் இப்போது உங்களுக்கு உதவ முன் வருவார்கள். குடும்பத்துல சிக்கல்கள் விலகி அமைதி திரும்பும். அரசியல்வாதிகளுக்கு மதிப்பு அந்தஸ்து உயரும். பெண்கள் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவாங்க. வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வந்து சேரும். உடல் ஆரோக்கியம் மேன்மை அடையும். எதிர்ப்புகள் விலகி இனிய சூழ்நிலை ஏற்படும். அலுவலகத்தில் மதிப்பு, மரியாதை கூடும். மனை, வீடு, வாகனம் போன்ற இனங்களில் லாபம் வரும்.



**மீனம் :** பொருளாதார நிலையில் அபிவிருத்தி உண்டாகும். அலுவலகத்தில் பதவி உயர்வு, இடமாற்றம் போன்றவை நிகழலாம். அலுவல் காரணமாக சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. உங்க புத்திசாலித்தனம், சாமர்த்தியத்தால் சில சாதனை பண்ண போறீங்க. இதனால புகழ் பாராட்டு கிடைக்கும். மாணவர்களுக்கு யோக காலம். மேல் படிப்புக்காக வெளிநாடு செல்ல காலம் கனிஞ்சிருக்கு. திட்டமிட்டபடி புண்ணிய காரியங்கள் நடக்க சந்தர்ப்பம் வரும்.

**ஜூலை 24 முதல் 30 வரை**









# புலி வருது புலி!

'பொடா' சட்டத்தின் கீழ் மேலும் யார் யாரைக் கைது செய்ய இயலும்? இதோ ஒரு கற்பனை.

★ கோவில் திருவிழாக்களில் புலி வேஷம் போட்டு ஆடுபவர்கள்.

★ புலிமீது அமர்ந்திருக்கும் அய்யப்பன் அல்லது அம்பாள் பூஜை செய்பவர்கள்.

★ ஆடு, புலியாட்டம் விளையாடுபவர்கள்

★ புலிப்பல் வைத்த மைனர் செயின் போட்டிருப்பவர்கள்.

★ புலி படம் போட்ட ஸ்டாம்பு, ரூபாய் நோட்டு மற்றும் காலண்டர் வைத்திருப்போர்.

★ புலியை வைத்து சர்க்கஸ் நடத்துவோர்

★ டைகர்பாம் உபயோகிப்பவர்கள்

★ பள்ளி / கல்லூரிகளில் புலிகளைப் பற்றி பாடம் நடத்தும் ஆசிரியர்கள்

புலி என்று சொன்னாலும், புளி என்று உச்சரித்தாலும் புலியென்றே நினைவூட்டுவதாகக் கருதி புளிகளுக்கும் இந்தச் சட்டம் பொருந்தும்.

★ புளியந்தோப்பு வைத்திருப்பவர்கள், மற்றும் புளி வியாபாரம் செய்வோர்.

★ புளிய மரத்தடியில் நிற்பவர்கள் அல்லது தூங்குபவர்கள்.

★ புளியோதரை செய்பவர்கள்.

★ சமையல் குறிப்பு புத்தகங்களில் புளி சம்பந்தப்பட்ட சமையல் வகைகளைப் பற்றி எழுதுபவர்கள்.

★ புலியூர், புளியம்பட்டி போன்ற ஊர்களில் வசிப்பவர்கள்.

★ சாப்பிட்டபின் புளியேப்பம் விடுபவர்கள்.

- ச. சோமசுந்தரம்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

